உ

பர்த்ருஹரி ஸுபாஷித த்ரிசதீ.

# வைராக்ய சதகம்.

---

39



 [Price Re. 1—0—0.

# ஸ்ரீ ஜனார்த்தந பிரிண்டிங் ஓர்க்ஸ் லிமிடெட்,
## டவுன் ஹைஹஸ்கூல் ரோடு,
## கும்பகோணம்.

---

## கிடைக்கும் புஸ்தகங்கள்.

---

1. யஜுஃ: ஸந்த்யாவந்தனம்.
   நாகரத்தில் (மூலம் மட்டும்) — ரூ. அ. ப. 0—2—0

2. தினசரிபாராயணார்ஹமான
   தேவீ ஸ்தோத்திரங்கள்.
   (தமிழில்) இதில் லக்ஷ்மீ ஸ்தோத்திரம் லக்ஷ்மீ அஷ்டகம், அன்னபூர்ணாஷ்டகம், ராஜராஜேஸ்வரி அஷ்டகம் இன்னும் பல தேவீ சம்பந்தமான ஸ்தோத்திரங்கள் அடங்கியது. தினசரி பாராயணத்திற்கு இன்றியமையாதது. — 0—2—0

3. ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம்.
   மூலம் நாகரத்திலும், தமிழ் அர்த்தத்துடன் ஜபக்ரமத்துடனும் கூடியது. — 0—4—0

4. ஆர்யா சதகம்.
   மூகபஞ்சசதீயின் முதல் பாகம். மூலம் நாகரத்திலும், தமிழிலும், பதவுரை விசேஷ குறிப்புகளுடன் கூடியது. — 0—10—0

5. ஷை 2-வது பாகம் கடாக்ஷ சதகம். — 0—12—0

6. ஷை 3-வது பாகம் பாதாரவிந்த சதகம். — 0—12—0

7. மூகபஞ்சசதீ.
   மூலம் மட்டும், நாகரத்தில் — 0—10—0

பர்த்ருஹரி ஸுபாஷித த்ரிசதி.

# வைராக்ய சதகம்.

---



[Price Rs 1—0—0.

ஸ்ரீ:

# பர்த்ருஹரி ஸுபாஷிதம்.

## வைராக்ய சதகம்.

---

## முகவுரை.

---

யோகீஶ்வரரெனப்படுகிற பர்த்ருஹரி மஹா கவியால் இயற்றப்பட்ட ஸுபாஷித த்ரிசதியில் ஒன்றான வைராக்ய சதகம் என்ற பாகமானது ஆர்யதர்மம் பத்திரிகையில் தமிழ் மொழி பெயர்ப்புடன் பிரசுரிக்கப்பட்டு வந்தது. இப்போது பூர்த்தியாகி தனியாக புத்தக ரூபத்தில் வெளியிடப் பட்டுள்ளது. ஏற்கனவே நீதி ஶதகம் வெளியிடப்பட்டுள்ளதை அபிமானிகள் அறிந்ததே. மத்தியிலுள்ள சிருங்கார சதகத்தைவிட்டு வைராக்ய சதகத்தை மொழிபெயர்த்து வெளியிட்டதில், சிருங்கார ரஸம் தள்ளும்படி என்ற எண்ணமில்லை. ஆனால் தற்போதுள்ள ஜன ஸமூஹத்தின் புத்திப் போக்கு நிலைமையில் சிருங்கார விஷயத்தைவிட, உயர்ந்த தத்வங்களும், ஸன்மார்க்க சிக்ஷையும், இந்திரிய நிக்ரஹ, தெய்வ பக்தி, வைராக்யாதி ஸத்குணங்களும் புகட்டும் வைராக்ய சதகம் வெளிப்படுவது மிகவும் ஸமயோசிதமென்று ஆர்யதர்மம் தனது கொள்கைக்கேற்ப நிச்சயித்து பிரசுரித்துவந்தது. இந்த சதகத்தில் கவி, வைராக்யத்திற்கு ஸாதனமாயும், பலனுயும் உள்ள பத்துவித உள்பிரிவுகளை அமைத்து எழுதியிருப்பதைப் படிப்பதால் மிகுந்த நன்மையேற்படும். ஆசையை அடக்குதல், யாசனையை வெறுத்தல், மனதை வசப்படுத்தி நித்யா நித்யவஸ்து விவேகம் உண்டாகும்படி செய்து, கடைசியாக சிவ பூஜையில் ஆழ்ந்து, அவதூத சர்யைகொண்டு ப்ரம்ஹத்தில் லயிப்பதுபோன்ற உயர்ந்த தத்வங்களையும் லக்ஷ்யங்களையும் கவி வெகு அழகாக ரசனைசெய்து உலகுக்கு உபகரித்துள்ளார். இதை நமது ஆஸ்திக ஸமூஹம் படித்துப் பயன்படவேண்டுமென்ப துடன் காவ்ய கலா ரஸிகர்களும் இந்த மஹா கவியின்

காவ்ய ரசனா சமத்காராதிகளை பூர்ணமாக அநுபவிக்கவும் இந்தப் பிரசுரம் உதவுமென்று நம்புகிறோம். தென்னிந்தியாவில் பத்ருஹரி என்பது ஸர்வ ஸஹஜமாக ஸாதாரணப் பேச்சுகளில்கூட பிரஸித்தமாயிருப்பதால் இதன் அர்த்தத்தை ஸம்ஸ்க்ருத பாஷா பரிசயமில்லாதவர்களும் அறிந்து அநுபவிக்கவே தமிழ் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது.

பர்த்ருஹரி விஷயமாக வேறு சில அம்சங்களை நீதி சதக முகவுரையில் கூறியுள்ளோம்.

பர்த்ருஹரி கவியின் சரித்ரம் ஸரியான ஆதாரத்துடன் கிடைத்தால் பிரசுரிக்க உத்தேசமிருந்தது. ஆனால் அது கிடைக்கவில்லை. ஸ்ரீமான் ஸ்ரீனிவாச சர்மா என்பவர் தமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களைக்கொண்டு சரித்திர சுருக்கமொன்று எழுதியதை இதில் பிரசுரித்துள்ளோம். இதைவிடச் சிறந்த தோரணையில் உண்மையான ஆதாரத்துடன் சரித்திரம் கிடைத்தால் அதையும் வெளியிட உத்தேசம் கொண்டுள்ளோம்.

நீதி சதகத்தைப்போலவே இதிலும் சுலோகங்கள் தமிழிலும் பதம் பதமாக அர்த்தமும், தாத்பர்யமும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இதன் மொழிபெயர்ப்பு, ஆர்யதர்மம் பத்திராதிபரால் செய்யப்பட்டதென்பதையும் குறிப்பிட விரும்புகிறோம். கூடிய வரையில் அச்சுப் பிழைகள் ஏற்படா வண்ணமும் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

ஆயினும் மொழிபெயர்ப்பு விஷயத்தில் ஏதாவது மாறுதல் செய்யவேண்டியிருந்தாலும், அச்சுப் பிழை ஏற்பட்டிருந்தாலும் நண்பர்கள் அவைகளை நமக்குத் தெரிவித்தால் மறு பதிப்பில் திருத்த ஸௌகர்யம் ஏற்படும்.

அன்பர்கள் இந்த நமது முயற்சியை ஆதரித்துப் பூர்ணமாக உதவிசெய்ய வேண்டுகிறோம்.

கும்பகோணம்,
21—8—50.

S. கல்யாணஸுந்தரம்,
(பிரசுரகர்த்தா),
ஸ்ரீ ஜனார்த்தந பிரிண்டிங் ஒர்க்ஸ், (லிட்).

உ

ஸுபாஷிதத்ரிசதீ

# ஸ்ரீ பர்த்ருஹரியின் சரித்திர சுருக்கம்.

---

விஷ்ணு சர்மா என்பவருடைய புதல்வராகிய சந்திர சர்மா என்ற ஓர் அந்தணர், சின்னாளிருந்து பின்னாலழியும் இழிந்த பொருட்செல்வத்தைப் பொருட்செய்யாது, என்றும் நிலைபெற்ற பேரின்பப்பேற்றை அளிப்பதற்குச் சிறந்த கருவியான கல்விச் செல்வத்தைப் பெற விரும்பித் தேசமெல்லாம் சுற்றிவரும்பொழுது, நடந்த அயர்வினால் வழியிலிருந்த ஒரு மரத்தை அடைந்து அதன் நிழலில் படுத்துறங்கினார். அம்மரத்தின் மேற்பாகத்தில் ஒரு பிரஹ்மரக்ஷஸு சாபவசத்தால் பலகாலம் வசித்து வந்தது. தற்செயலாக அது கீழே படுத்துறங்கும் பிராமணனைக்கண்டு குதித்திறங்கி அவரைத் தட்டியெழுப்பி அவரிடம் “நான் முற்பிறவியிலொரு பிராமணனாயிருந்து பல வித்தைகளைக் கற்றும் அவற்றைப் பிறருக்கு உபதேசிக்காத தோஷவசத்தால் இப்பிரஹ்மராக்ஷஸாகிய பிறவியையடைந்தேன். இனி அவற்றை உனக்கு உபதேசித்துவிட்டுப் பேய்ப்பிறவியிலிருந்து நீங்கி ஈடேற்றமடைய விரும்புகின்றேன் என்றது. கல்வியைப் பெறுவதற்காகவே நாடெங்கும் அலைந்து திரிந்துவரும் அந்தணர் அதைக்கேட்டு மிகமகிழ்ந்து, கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததெனக்கருதி அவ்வித்தைகளைக் கற்கத்தொடங்கினார். ஆறுமாத காலத்தில் எல்லா வித்தைகளையும் ஊணுறக்கமின்றி இடைவிடாமல் கற்றுமுடித்தார். கல்வியனைத்தையும் கற்பித்துவிட்டு அப்

பிரஹ்மராக்ஷஸ— தன்உடலைவிட்டு விதேஹ கைவல்யத்தை அடைந்தது.

பின்னர் அவ்வந்தணர் ஒரு நகரில் புகுந்து வரும்பொழுது வழியில் இருந்த ஒரு வேசி வீட்டின் வெளித்திண்ணையில் சிரமத்தை நீக்கிக்கொள்வதற்காகப் படுத்துக்கொண்டார். ஆறுமாதகாலம் ஒரே தூக்கமாக இருந்துவிட்டார். அவ்வீட்டிலிருந்த தாசி வந்து பார்த்து அச்சம்கொண்டு வைத்தியரை வரவழைத்துக் காண்பிக்க, அவர் "இத்தூக்கம் தெளிய ஆறுமாதம் செல்லும்; அதுவரை அன்னஸாரமிட்டுக் காக்கவேண்டும்" என்றார். அது முதல் அவ்வேசியின் மகளாகிய ஒரு யுவதி, பிராமணனது உடலைக் காப்பதற்காக அன்னத்தைக் கரைத்து உடலில் பூசுதல் முதலிய தொண்டுகளைச் செய்துகொண்டு வந்தாள். ஆறுமாதங்கள் கழிந்ததும் உறக்கம் தெளிந்தெழுந்த பிராமணர் எதிரே வணக்கத்துடன் நின்றுகொண்டிருந்த சிறுமியை நோக்கி நடந்தவரலாற்றைக் கேட்டார். அக்கற்பரசி நடந்ததைக் கூறினள். மகிழ்ந்த அப்பிராமணர் வேசி மகளை நோக்கி "உனக்கு என்ன வரம் வேண்டும்" என்றார். அவரிடம் காதல்கொண்ட அம்மங்கை அவரை வரனாக அடைவதையே வரமாகக்கேட்டாள். அப்பிராமணர் சூத்ர ஸ்திரீயாகிய அவளை மணக்க விரும்பவில்லை. அவளோ அவரிடம் மிகுந்த காதல் கொண்டிருந்ததால், காதற்பித்து தலைக்கேறி மிகவும் வாடி அத்தேச அரசனிடம் தன் குறையைத் தீர்த்துவைக்குமாறு வேண்டவே, அரசனும் அவளது நிலைமையைக்கண்டு அந்தணரிடம் "பிராமணன் நான்கு ஜாதி ஸ்திரீகளையும் ஏககாலத்தில் மணந்துகொள்ளலாம்" என்று ஸ்மிருதியில் கூறியிருப்பதை ஆதாரமாகக் காட்டி அவளை மணக்காவிடில் பெண் கொலைக்குக் காரணமாக நேரிடும் என்றும் கூறி, அப்பிராமணரை உடன்பாட்

டிஞல் தன் மகளையும், தன் மந்திரி மகளையும், ஓர் உயர்ந்த
வைசியன் மகளையும், அவ்வேசி மகளையும் பிராமணருக்குக்
கொடுத்தான். பிராமணர் நான்கு ஜாதி ஸ்திரீகளையும்
மணந்துகொண்டார்.

சில ஆண்டுகள் சென்றன. சந்திர சர்மாவின் மனைவி
கள் கருக்கொண்டனர். தக்க காலத்தில் நால்வரும் குழந்
தைகளைப் பெற்றனர். பிராமண புத்ரிக்குப் பிறந்த குழந்
தைக்கு வரருசி என்றும், க்ஷத்திரிய குமாரியின் குழந்தை
க்கு விக்ரமாதித்யன் என்றும், வைசிய குமாரியின் குழந்
தைக்கு பட்டி என்றும், சூத்ர ஸ்திரீயின் குழந்தைக்குப்
பர்த்ருஹரி என்றும் பெயரிடப்பட்டன. புதல்வர்களோடு
சிலகாலமிருந்துவிட்டு, தவம் செய்வதற்காக அந்தணர் காடு
சென்றார். இப்பெரியாரே ஸ்ரீ சங்கராசார்ய பகவத்பாதா
சாரியசுவாமிகளின் குருமூர்த்தியாகிய ஸ்ரீகோவிந்த பகவத்
பாதாசார்ய சுவாமிகளாவார். மூத்தபிள்ளையாகிய வரருசி
யும் பால்யத்திலேயே தவம் செய்யும் பொருட்டுக் காட்டுக்
குச் சென்றார் சில ஆண்டுகள் சென்றபின் விக்ரமாதித்த
னும் பட்டியும் தவம்செய்து எல்லாவித ஸித்திகளையும்
பெறக் காட்டுக்குச் செல்லத் துணிந்து தங்கள் சகோதரனா
கிய பர்த்ருஹரியினிடம் ராஜ்யத்தை ஒப்புவித்துக் காட்டுக்
குச் சென்றனர்.

பின்பு பர்த்ருஹரி ராஜ்யத்தை ஆண்டுவரும்பொழுது
ஒரு நாள் ஒரு முனிவர் அரசனைக்காண வந்தார். அவர்
அரசனிடம் ஒரு மாம்பழத்தைக் கொடுத்து "அரசே!
இதற்கொப்பான பழத்தை எங்கும் காணமுடியாது, இதை
புசித்தால் கிழப்பருவமடையாமல் என்றும் அழகிய இள
மைப் பருவத்துடன் சிரஞ்சீவியாய் வாழலாம். ஆதலால்
இதைத் தாங்கள் புசியுங்கள்" என்று கூறி ஆசிரமத்திற்

குச் சென்றார். அரசன் அதைத் தான் உண்பதினும் தன் பட்டஸ்திரீ புசித்தால் என்றும் யுவதியாக இருப்பாளாத லால் மரணபரியந்தம் யுவதியான தன் மனைவியுடன் சுகத் தை அனுபவிக்கலாம் என்று கருதித் தன் மனைவிக்கு அதன் பெருமையைக் கூறி அவள் கையில் கொடுத்தான். அவள் அதைத் தன் சோரநாயகனாகிய குதிரைக்காரனுக் குக் கொடுத்தாள். அவன் தன் சோரநாயகியாகிய அரண் மனை கூட்டும் ஒரு வேலைக்காரிக்குக் கொடுத்தான். அவள் அதை வாங்கி அதன் பெருமை தெரியாமல் தன் குழந்தை களுக்குக் கொடுப்போமென்றெண்ணி அப்பழத்தைத் தன் குப்பைக் கூடையின் மீது வைத்துக்கொண்டு செல்லும் போது அரசன் மாளிகையினின்று அதைப்பார்த்து முனி வர் தனக்குக் கொடுத்த பழம் போன்றதாக இருக்கிறதென் றெண்ணி அவளைக்கூப்பிட்டு இப்பழம் ஏது என்று விசா ரித்தார். அவள் அது தனக்குக் குதிரைக்காரனால் கொடுக் கப்பட்டதென்று கூறவே அரசன் மிகுந்த கோபத்துடன் தன் மனைவியை அழைத்து விசாரித்ததில் நடந்த காரியம் முழுவதையும் தெரிந்துகொண்டு "ஐயோ ! கணவனுக்கு நல்லவள் போல் நடிக்கும் இத்தகைய கொடிய வியபிசாரிக் கு நற்கதியேது ? அறியாமையால் செய்யும் வியபிசாரத் தினும் கணவனுக்கு நல்லவள்போல் நடித்துக்கொண்டு வஞ்சகமாகத் தீச்செயல் புரியும் வஞ்சகிகளுக்கு என்றும் நற்கதியே கிடையாது. இவர்கள் எதையும் செய்யத்துணி யலாம். இவளைக் கொன்று வேறு ஒருத்தியை மணப்பே னேயாகில் அவளும் இவ்வாறே இருப்பின் என் செய்வது? எவ்வாறு நம்புகிறது ? ஆதலால் இன்று முதல் யாதொரு விஷய இன்பத்தையும் விரும்பேன்" என்று நினைக்கு அப் பழத்தைத் தானே புசித்துத் தன் ராஜ்யத்தையும் துறந்து அன்றே காடு சென்று தவஞ்செய்யத் தொடங்கினார். இவ்

வாறுள்ள அவர் பல தலங்களைச்சுற்றி வரும்பொழுது ஒரு சமயம் ஒரு நகரின் அருகிலுள்ள ஒரு குப்பைமேட்டில் யோக நித்திரையிலிருந்தார். அந்நகரத்தரசன் மிகுந்த தர்மசிந்தனையுள்ளவனாதலால் தூதர்களைகூப்பிட்டு "பிக்ஷுக்கள் யாரேனுமிருப்பின் அழைத்துவாருங்கள். அவர்கள் விரும்பியவற்றைக் கொடுப்பேன். அழைத்து வருபவர்கட்கும் சன்மானங்கள் செய்கிறேன்". என்று கட்டளையிட்டான். தூதர்கள் ஆங்காங்கு சுற்றிவரும்பொழுது குப்பைமேட்டில் நிஷ்டையிலிருந்த பிக்ஷுவைப்பார்த்து அரண்மனைக்கு வருமாறு கூப்பிட்டனர். அவர் மௌனமாயிருந்தார். தூதர்கள் அரசனிடம் சென்று செய்தியை அறிவித்தனர். அரசன் பரிவாரங்களுடன் பிக்ஷுவின் அருகில் வந்து ஓ! பிக்ஷுவே! உமக்கு எது வேண்டுமானாலும் இதே நேரத்தில் கொடுக்கிறேன். என் ராஜ்யத்தைக் கேட்டாலும் தருகின்றேன். வாய்திறந்து வேண்டியதைத் தாங்கள் கேட்டு எனக்கு அருள்புரியவேண்டும்" என்றான். உடனே சுவாமிகள் புன்முறுவலுடன் "அரசே! நான் ராஜ்யம் அனைத்தையும் பிறரிடம் கொடுத்துத் தான் இக்கந்தையையும் கௌபீனத்தையும் வாங்கித் தரித்திருக்கின்றேன். ஆதலால் எனக்கு உன் செல்வம் தேவையில்லை'' என்றார்.

உடனே அரசன் அவரைத் தமது சக்ரவர்த்தியாகிய பர்த்ருஹரி என்று உணர்ந்துகொண்டு, தெரியாமல் அபசாரம் செய்துவிட்டதற்காக வருந்தி ஸாஷ்டாங்கமாய் விழுந்து அவரை வணங்கித் தன் பிழையைப் பொறுத்தருள வேண்டினன். மகிழ்ந்த சுவாமிகள் "அரசே! நீ யாதொரு அபசாரமும் செய்யவில்லையே! உனது தரும சிந்தனைக்கு மிகவும் மகிழ்கின்றேன்'' என்று கூறி அவனுக்கு அருள் புரிந்து அவ்விடம் விட்டுக் காடு சென்றார். காட்டில் பல

வருஷங்கள் தவஞ்செய்து வரும்பொழுது அவரது வைராக்யத்தில் சந்தேகித்த பார்வதி தேவிக்குச் சிவபிரான் அவருடைய முன்னிலையில் பார்வதியுடன் கூடியவராக தோன்றி அவரது வைராக்யத்தை நேர்முகமாகவே நிரூபித்துக்காட்டினார். இவ்வாறு வைராக்யத்திலும் அறிவிலும் சிறந்த பர்த்ருஹரி சுவாமிகள், நீதிசதகம், சிருங்கார சதகம், வைராக்ய சதகம், என்ற மூன்று சதகங்கள் கொண்ட (300 சுலோகங்கள் கொண்ட) ஸுபாஷிதத்ரிசதி என்ற கிரந்த நூலையும், இன்னும் வியாகரண மஹாபாஷ்யகாரிகை, நாடக காவ்ய, முதலிய கிரந்தங்களையும் இயற்றியுள்ளார். (இந்த ஸுபாஷிதத்ரிசதியைத் தன்னை விடாது பின் தொடர்ந்து வந்தவளும், தன் குற்றத்தை மன்னிக்குமாறு வேண்டியவளுமாகிய தன் மனைவியினிடம் இரக்கமுற்று உபதேசித்ததாகவும் அதனல் அவள் சிறந்த அறிவைப்பெற்று உயர்கதியடைந்தாள் என்றும் கூறுவதுண்டு.) இத்தகைய சுவாமிகள் சிரஞ்சீவியாக காசிக்கருகில் 12 மைல் தூரத்தில் ஓர் குகையிலேயே தவம் செய்துகொண்டிருப்பதாகவும் கூறுவர். இத்தகைய சுவாமிகளால் எழுதப்பட்ட நூலே பர்த்ருஹரி ஸுபாஷிதத்ரிசதீ என்று வழங்குகிறது.



# பர்த்ருஹரி
# வைராக்கிய சதகம்.

चूडोत्तंसितचन्द्रचारुकलिकाचञ्चच्छिखाभास्वरो
लीलादग्धविलोलकामशलभः श्रेयोदशाग्रे स्फुरन् ।
अन्तः स्फूर्जदपारमोहतिमिरप्राग्भारमुच्चाटयं-
श्चेतःसद्मनि योगिनां विजयते ज्ञानप्रदीपो हरः ॥ १ ॥

1 சூடோத்தம்ஸித சந்த்ர சாருகலிகா
 சஞ்சத் சிகாபாஸ்வர:
லீலா தக்த விலோல காம ஶலப:
 ச்ரேயோ தஶாக்ரே ஸ்புரந் |
அந்த: ஸ்பூர்ஜதபாரமோஹ திமிர
 ப்ராக்பார முச்சாடயன்
சேதஸ் ஸத்மனி யோகிநாம் விஜயதே
 க்ஞானப்ரதீபோ ஹர:||

சூடோத்தம்ஸித - சிரஸில் அலங்காரமாக வைக்கப் பட்டுள்ள, சந்திர சாருகலிகா - சந்திரனுடைய அழகிய கலையால், சஞ்சத் சிகாபாஸ்வர: - பிரகாசிக்கிற ஜடையால் விளங்குகிறவரும், லீலாதக்த விலோல காம சலப: - விளையாட்டாகக் கொளுத்தப்பட்ட மன்மதனாகிய விளக்குப் பூச்சியை உடையவரும், ஶ்ரேயோ தஶாக்ரே ஸ்புரன் - சுபதசைகளில் முன்னணியில் விளங்குகிறவரும், அந்த: ஸ்பூர்ஜத பாரமோஹ திமிரப்ராக்பாரம் - உள்ளே சேர்ந்துள்ள எல்லையற்ற அஞ்ஞான இருளின் வேகத்தை, உச்சாடயன் -

தாத்திக்கொண்டு, ஹர: - ஸ்ரீ பரமேச்வரன், யோகிநாம் - தபஸ்விகளுடைய, சேதஸ் ஸத்மநி - மனக்கோவிலில், ஞானப்ரதீப: - ஞான ஸ்வரூபமான விளக்காக, விஜயதே - விளங்குகிறார்.

ஸ்ரீ பகவான் பரமேச்வரன், சிரஸில் அலங்காரமாக விளங்கும் சந்திர கலையால் பிரகாசிக்கிற ஜடையுடனும்; விஷமம் செய்த மன்மதனுகிய விளக்குப் பூச்சியை விளையாட்டாக பஸ்மமாக்கிய பிரபாவத்துடனும், மனிதர்களுடைய சுப கார்யங்களை முன்னின்று நிறைவேற்றிவைக்கும் கருணையுடனும், மனதிலுள்ள அக்ஞானமாகிய இருளைப் போக்குவதில் ஞான விளக்குப்போலிருப்பவருமாயும்கொண்டு, யோகிகளுடைய மனதில் எப்போதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்.

भ्रान्तं देशमनेकदुर्गविषमं प्राप्तं न किंचित्फलं
त्यक्त्वा जातिकुलाभिमानमुचितं सेवा कृता निष्फला ।
भुक्तं मानविवर्जितं परगृहेष्वाशङ्कया काकव-
त्तृष्णे जृम्भसि पापकर्मपिशुने नाद्यापि संतुष्यसि ॥ २ ॥

2 ப்ராந்தம் தேசம் அனேக துர்க விஷமம்
ப்ராப்தம் ந கிஞ்சித் பலம்
த்யக்த்வா ஜாதிகுலாபிமாந முசிதம்
ஸேவா க்ருதா நிஷ்பலா |
புக்தம் மாந விவர்ஜிதம் பரக்ருஹேஷு
ஆசங்கயா காகவத்
த்ருஷ்ணே! ஜ்ரும்பஸி பாபகர்ம பிசுனே!
நாத்யாபி ஸம் துஷ்யஸி||

அநேக துர்க்க விஷமம் - பற்பல தடைகளால் ஸஞ்சரிக்க யோக்யதையற்ற, தேசம் - இடங்களை, ப்ராந்தம் -

சற்றியாகிவிட்டது. கிஞ்சித் - கொஞ்சமாவது, பலம் - பிரயோஜனமானது, ந ப்ராப்தம் - அடையப்படவில்லை, உசிதம் - நியாயமான, ஜாதி குலாபிமானம் - ஜாதி குல அபிமானங்களை, த்யக்த்வா - விட்டு, க்ருதா - செய்யப்பட்ட, ஸேவா - சேவக வ்ருத்தியும், நிஷ்பலா - வீணாகியது. பரக்ருஹேஷு - பிறர் வீடுகளில், காகவத் - காக்கைபோல், ஆஶங்கயா - ஆசைப்பட்டு, மானவிவர்ஜிதம் - வெட்கத்தை விட்டு, புக்தம் - சாப்பிடப்பட்டது, த்ருஷ்ணே! - ஏ! ஆசையே!, பாபகர்ம பிசுநே! - பாப கர்மத்திற்கு அடையாளம்போன்ற நீ, ஜ்ரும்பஸி - மேல் மேலும் வளர்கிறாய். அத்யாபி - இப்போதும், ந ஸம்துஷ்யஸி - திருப்தியடையவில்லையே!

[இது முதல் ஒன்பது சுலோகங்களால் கவி வைராக்யத்திற்கு எதிரியான ஆசையென்கிற துர்குணத்தை தூஷிக்கிறார்.]

பணம் சேர்க்கும் ஆசையால் மஹா கஷ்டமான இடங்களையெல்லாம் சுற்றித்திரிந்தும் ஒரு பலனுமில்லை. தனது ஜாதி குல கௌரவங்களைக்கூட பறிகொடுத்து ஸேவக வ்ருத்திசெய்ததும் வீணாகியது. பிறர் வீடுகளில் காக்கை போல் சோற்று ஆசை பிடித்து மானம்விட்டுத் தின்றதிலும் பயனில்லை. இவ்வளவு அவமானம் ஏற்பட்டும் ஏ! ஆசா தேவியே! நீ திருப்திப்படவில்லை. பாபகர்மாவின் பயனாகிய நீ மேன்மேலும் விருத்தியாகிக்கொண்டே இருக்கிறாயே!

उत्खातं निधिशङ्कया क्षितितलं ध्माता गिरेर्धातवो
निस्तीर्णः सरितां पतिर्नृपतयो यत्नेन संतोषिताः ।
मन्त्राराधनतत्परेण मनसा नीताः श्मशाने निशाः
प्राप्तः काणवराटकोऽपि न मया तृष्णे सकामा भव ॥ ३

3 உத்காதம் நிதிசங்கயா க்ஷிதிதலம்
 த்மாதா: கிரேர் தாதவ:
நிஸ்தீர்ண: ஸரிதாம் பதி: ந்ருபதயோ
 யத்நேந ஸந்தோஷிதா: |
மந்த்ரா ராதந தத்பரேண மநஸா நீதா:
 ஶ்மஶாநே நிஶா:
ப்ராப்த: காணவராடகோபி ந மயா
 த்ருஷ்ணே! ஸகாமா பவ||

நிதிஶங்கயா - புதையல் இருக்குமென்ற எண்ணத்தால், க்ஷிதிதலம் - பூமியானது, உத்காதம் - தோண்டப்பட்டது. கிரே: - மலையினுடைய, தாதவ:-நற்செங்கப்பொடி முதலிய வஸ்துக்கள், த்மாதா: - தங்கமிருக்குமென்ற துராசையால் அக்னியில் ஊதிப் பார்க்கப்பட்டன. ஸரிதாம் பதி: - ஸமுத்ரமானது, நிஸ்தீர்ண:-தாண்டப்பட்டது. ந்ருபதய: - பணமுள்ள அரசர்கள், யத்நேந-சிரமப்பட்டு, ஸந்தோஷிதா:- திருப்தி செய்துவைக்கப்பட்டார்கள். மந்த்ரா ராதந தத்பரேண - மந்திரம், தேவபூஜை முதலிய செய்ய விரும்பிய, மனஸா-எண்ணத்துடன், ஶ்மஶாநே-சுடுகாட்டில், நிஶா:- அநேக இரவுகள், நீதா: - கழிக்கப்பட்டன, காணவராட கோபி - ஒரு ஓட்டை சோழிகூட, மயா - என்னால், ந ப்ராப்த: - அடையப்படவில்லை.

த்ருஷ்ணே! ஏ! ஆசையே! ஸகாமா பவ அவமானப் படுத்தவேணுமென்ற இஷ்டத்துடனேயே இருந்துவா!

3. பணம் ஸம்பாதிக்க வேணுமென்ற துராசையால் பூமியில் புதையல் கிடைக்காதாவென்று நினைத்து பூமியைத் தோண்டிப் பார்த்தாகிவிட்டது. மலையில் கிடைக்கும் மண் கனியெல்லாம் தங்கம் கிடைக்குமென்ற துராசையால் நெருப்பில் ஊதிப்பார்த்தாகிவிட்டது. வியாபார நிமித்தம் ஸமுத்

திரம் தாண்டியும் போய் பார்த்தாகிவிட்டது. பணக்கார அரசர்களிடம் சேவக விருத்திசெய்து அவர்களை திருப்தி செய்து வைத்தாகிவிட்டது. மந்திரஸித்தி, தேவ பூஜை யால் பணம் ஸம்பாதிக்க விரும்பி ஸ்மஶானத்தில் பல இரவு கள் கழித்தாகிவிட்டது. இவ்வளவு செய்தும் ஒரு ஓட்டை சோழிகூட கிடைக்கவில்லையே! ஏ! ஆசையே! என்னை இப்படி ஆட்டிவைத்து அவமானப்படுத்த விரும்பிய நீ இப் போது இஷ்டபூர்த்தியடைந்து விளங்குவாயாக.

खलालापाः सोढाः कथमपि तदाराधनपरै-
  र्निगृह्यान्तर्बाष्पं हसितमपि शून्येन मनसा ।
कृतो चित्तस्तम्भप्रतिहतधियामञ्जलिरपि
  त्वमाशे मोघाशे किमपरमतो नर्तयसि माम् ॥ ४॥

கலாலாபா: ஸோடா:
  கதமபி ததாராதநபரை:
நிக்ருஹ்யாந்தர்பாஷ்பம்
  ஹஸிதமபி ஶூந்யேந மநஸா ।
க்ருதோ சித்தஸ்தம்ப
  ப்ரதிஹத தியாம் அஞ்ஜலிரபி
த்வமாஶே! மோகாஶே!
  கிமபரமதோ நர்த்தயஸி மாம் ॥ 4.

கலாலாபா: - அயோக்யர்களுடைய வசவுகள், ததாரா தநபரை: - அவர்களை திருப்திசெய்து வைக்கவேண்டிய கதி யிலுள்ளவர்களான நம்மால், கதமபி - கஷ்டப்பட்டு, ஸோ டா: - ஸஹிக்கப்பட்டன. பாஷ்பம் - கண் ஜலத்தை, அந்த:- உள்ளேயே, நிக்ருஹ்ய - தடுத்து, ஶூந்யேந - சொரணை யற்ற, மநஸா - மனதுடன், ஹஸிதமபி - சிரிக்கவும் நேர்ந்

தது. வித்த-ஸ்தம்ப-ப்ரதிஹத-தியாம் - பணமென்கிற கர்வத்தினல் பாழடைந்த புத்தியுள்ளவர்களுக்கு, அஞ்ஜலிரபி - கை கூப்பி நமஸ்காரமும், க்ருத: - செய்யப்பட்டது. மோகாசே! - வீணுகப்போன மனோரதத்தையுடைய, ஏ! ஆசே!- ஆசையே, அத:பரம் - இதற்கு மேலும், மாம் - என்னை, கிம் நர்த்தயஸி - ஏன் ஆட்டிவைக்கிருய்!

4 பண ஸம்பாதன ஆசையால் துஷ்டர்களை அண்டிப் பிழைக்க நேர்ந்து, அவர்கள் சொல்லிய துஷ்ட வசவுகளையெல்லாம் கேட்டு ஸஹித்தோம். அவர்களுடைய வசவு ஸஹிக்காமல் கண்களில் பாஷ்ப ஜலம் பெருகுவதையும் உள்ளடக்கி சொரணையற்ற மனதுடன் வெளிக்கு சிரித்துக் கொண்டு அடிமை செய்தோம். பண கர்வம் பிடித்து புத்தி யிழந்த துஷ்டர்களுக்கு கைகூப்பி நமஸ்காரமும் செய்தோம். ஒன்றும் பிரயோஜனமில்லாமல் போய்விட்டது. ஏ! ஆசையே! உனது மனோரதம் நிறைவேறவில்லையே? மேலும் என்னை எப்படி ஆட்டிவைக்கப்போகிருயோ?

अमीषां प्राणानां तुलितबिसिनीपत्रपयसां
कृते किं नास्माभिर्विगलितविवेकैर्व्यवसितम् ।
यदाढ्यानामग्रे द्रविणमदनिःसंज्ञमनसां
कृतं मानव्रीडैर्निजगुणकथापातकमपि ॥ ५ ॥

அமீஷாம் ப்ராணனாம்
துலித பிஸினீ பத்ர பயஸாம்
க்ருதே கிம் நாஸ்மாபி:
விகளித விவேகை: வ்யவஸிதம்।

பதாட்யாநா மக்ரே த்ரவிணமத
நிஸ்ஸம் ஞமநஸாம்
க்ருதம் மாநவ்ரீடை:
நிஜகுண கதாபாதகமபி ll 5

துலித பிஸினீ பத்ரபயஸாம் — தாமரையிலையிலுள்ள ஜலத்திற்கு ஸமமான, அமீஷாம் ப்ராணாநாம் — இந்த பிராணங்களின், க்ருதே — ரக்ஷணத்தின் பொருட்டு, விகளித விவேகை: — விவேகத்தை இழந்தவர்களான, அஸ்மாபி: — நம்மால், கிம் ந வ்யவஸிதம் — எது தான் செய்யப்படவில்லை? த்ரவிணமத நிஸ்ஸம்ஞமநஸாம்—பணக்கொழுப்பினால் ப்ரக்ஞையிழந்த, ஆட்யாநாம் — பணக்காரர்களுடைய, அக்ரே — முன்னிலையில், மானவ்ரீடை: — வெட்கத்தை இழந்து, நிஜகுணகதா பாதகமபி — தன் குணத்தைப் பேசுவதான பாபமும், க்ருதம் — செய்யப்பட்டதே!

5 தாமரையிலையிலுள்ள நீர்போல் நிலையற்றதான இந்த பிராணனைக்காக்கும் பொருட்டு நாம் விவேகத்தையிழந்து என்ன அகார்யத்தைத்தான் செய்யவில்லை? எல்லாம் செய்தோம். முக்கியமாக ஆத்ம பிரசம்ஸை என்பது சாஸ்திரங்களில் பெரும் பாதகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பெரியோர்கள் அந்த அகார்யத்தைச் செய்ய ஒருபோதும் இசையமாட்டார்கள். ஆயினும் இந்த அல்ப பிராணனைக் காத்துக்கொள்ள விரும்பி பணக்கொழுப்படைந்து அறம் பாவம் பிடித்த தனிகர்களின் முன்னிலையில் நின்று பணம் ஸம்பாதிக்க எண்ணி ஆத்மபிரசம்ஸை என்ற பாதகத்தையும் செய்துவிட்டோம்.

क्षान्तं न क्षमया गृहोचितसुखं त्यक्तं न संतोषतः
सोढा दुःसहशीतवाततपनक्लेशा न तप्तं तपः ।

ध्यातं वित्तमहर्निशं नियमितप्राणैर्न शंभोः पदं
तत्तत्कर्म कृतं यदेव मुनिभिस्तैस्तैः फलैर्वञ्चिताः ॥ ६ ॥

க்ஷாந்தம் ந க்ஷமயா க்ருஹோசித
ஸுகம் த்யக்தம் ந ஸந்தோஷத:
ஸோடா: துஸ்ஸஹஸீத வாத
தபநக்லேஸா ந தப்தம் தப: |
த்யாதம் வித்த மஹர்நிஸம்
நியமிதப்ராணை: ந சம்போ: பதம்
தத்தத் கர்ம க்ருதம் யதேவ
முநிபி: தைஸ்தை: பலை: வஞ்சிதா: ॥ 6

க்ஷாந்தம் - பொறுமை காட்டப்பட்டது. ஆனல், ந க்ஷமயா - க்ஷமாகுணத்தாலல்ல, க்ருஹோசித ஸுகம் - வீட்டில் நியாயமாக அனுபவிக்கவேண்டிய ஸுகமும், த்யக்தம் - கைவிடப்பட்டது. ஆனல், ந ஸந்தோஷத: - ஸந்தோஷத்தாலல்ல. துஸ்ஸஹஸீதவாத தபநக்லேசா - ஸஹிக்க முடியாத குளிர் காற்று, ஸூர்யதாபம் முதலிய கஷ்டங்கள், ஸோடா: - ஸஹிக்கப்பட்டன. ஆனல், தப: - தபஸ்ஸானது, ந தப்தம் - செய்யப்படவில்லை, நியமிதப்ராணை: - பிராணனை அடக்கியவது, அஹர்நிஸம் - இரவு பகலாக, வித்தம் - பணமானது, த்யாதம்-நினைக்கப்பட்டுவருகிறது. ஆனல், ந சம்போ: பதம் - ஈசனுடைய திருவடியானது தியானிக்கப்படவில்லை, முநிபி:- ரிஷிகளால், யதேவ க்ருதம் - எந்தெந்த கர்மாக்கள் செய்யப்பட்டனவோ, தத்தத் கர்ம - அந்த கர்மாக்களையே, க்ருதம் - செய்யப்பட்டன, தைஸ்தை: - அந்தந்த, பலை: - பயனல், வஞ்சிதா: - சூன்யமாகிவிட்டோம்.

6 வைராக்கியசாலிகளான ரிஷிகள் வைராக்யம் காரணமாக என்னென்ன கார்யங்கள் செய்தனரோ, அ[illegible] கார்

யங்களை குடும்பத்தில் நாமும் செய்ய நேர்ந்தது. ஆனால் காரணம் வேறு, வீட்டில் நடக்கும் தகாத கார்யங்களைப் பொறுக்க நேர்ந்தது. ஆனால் அது க்ஷமாகுணமாக அன்று. வேறுகதியில்லாமையாலேயே; இம்மாதிரியாகவே அவச்ய ஸுகங்களை இழந்ததும், ஸந்தோஷத்தாலல்ல. குளிர் வெய் யில் முதலிய கஷ்டங்களை ஸஹித்ததும் தபஸ் என்ற நியமத் தாலல்ல. எப்போதும் பணத்தைப்பற்றியே த்யானமேயல் லது ஈச்வரன் திருவடியைப்பற்றியில்லை. ரிஷிகள் எந்த கார் யங்களைச் செய்தனரோ அதே கார்யத்தையும் ஸம்ஸார நிர்பந்தத்தால் செய்ய நேர்ந்தது. ஆனால் அந்த தபஸ்பலன் மட்டும் கிட்டவில்லை.

भोगा न भुक्ता वयमेव भुक्ता-
स्तपो न तप्तं वयमेव तप्ताः ।
कालो न यातो वयमेव याता-
स्तृष्णा न जीर्णा वयमेव जीर्णाः ॥ ७ ॥

போகா: ந புக்தா: வயமேவ புக்தா:
தபோ ந தப்தம் வயமேவ தப்தா: ।
காலோ ந யாதோ வயமேவ யாதா
த்ருஷ்ணா ந ஜீர்ணா வயமேவ ஜீர்ணா: ॥

போகா :- ஸம்ஸார ஸுகங்கள், நபுக்தா:- அனுபவிக்கப் படவில்லை. ஆனால் வயமேவ- நாமே- புக்தா:- விழுங்கப் பட்டு விட்டோம். தப: - தபஸ்ஸானது:, ந தப்தம்-செய்யப் படவில்லை, வயமேவ - நாமே, தப்தா - தாபத்தை அடைந் தோம், கால:-காலமானது, ந யாத:-கழியவில்லை, வயமேவ- நாமே, யாதா:-ஆயுள் முடிவை அடைந்துள்ளோம், த்ருஷ்ணா- ஆசையானது, ந ஜீர்ணா-இளைக்கவில்லை, வயமேவ ஜீர்ணா- நாமே ஜீர்ணமாகி விட்டோம்.

(7) நல்ல ஸுகாநுபவத்திற்காகப் பாடுபட்டும் அது கிடைக்காமல், அந்தக்கஷ்டம் நம்மையே விழுங்கி விட்டது. தபஸ் ஒன்றும் செய்ய கொடுத்து வைக்கவில்லை. நம்முடைய நிலைமையே தாபமடைந்துள்ளது. காலமோ சுருங்கவில்லை. நாமே சுருங்கிவிட்டோம். ஆசை இளைக்கவில்லை. நாமே இளைத்தோம்.

वलीभिर्मुखमाक्रान्तं पलितेनाङ्कितं शिरः ।
गात्राणि शिथिलायन्ते तृष्णैका तरुणायते ॥ ८ ॥

வலிபி: முகமாக்ராந்தம் பலிதேநாங்கிதம் ஸிர: |
காத்ராணி ஶிதிலாயந்தே த்ருஷ்ணைகா தருணாயதே ||

முகம்-முகமானது, வலிபி:-சுருக்கங்களால், ஆக்ராந்தம்-ஆக்ரமிக்கப்பட்டு விட்டது, ஸிர:-சிரஸ், பலிதேந-நரைகளால், அங்கிதம் - வியாபிக்கப்பட்டது, காத்ராணி - சரீர அவயவங்கள் ஶிதிலாயந்தே-தழ தழத்து விட்டன. த்ருஷ்ணைகா-ஆசை யொன்று மட்டில், தருணாயதே-யௌவனம் பெற்று விளங்குகிறது.

(8) முகம் முழுவதும் கிழத்தனத்தால் சுருக்கங்கண்டு விட்டது. தலையும் நரைத்துவிட்டது. சரீரங்கள் தழதழத்து விட்டன. இவ்வளவு தசையிலும் ஆசையொன்று மட்டில் நல்ல யௌவனம்பெற்று விளங்குகிறது.

निवृत्ता भोगेच्छा पुरुषबहुमानोऽपि गलितः
समानाः स्वर्याताः सपदि सुहृदो जीवितसमाः ।
शनैर्यष्ट्युत्थानं घनतिमिररुद्धे च नयने
अहो मूढः कायस्तदपि मरणापायचकितः ॥ ९ ॥

நிவ்ருத்தா போகேச்சா
புருஷபஹுமாநோ(அ)பி களித:
ஸமாநா:, ஸ்வர்யாதா: ஸபதி,
ஸுஹ்ருதோ ஜீவிதஸமா: |

ஶனை: யஷ்ட்யுத்தானம்,
கனதிமிராருத்தே ச நயனே
அஹோ மூட: காய:
ததபி மரணாபாயசகித: ॥

போகேச்சா - விஷயஸுக ஆசையானது, நிவ்ருத்தா - போய்விட்டது, புருஷபஹுமானோபி - மனிதனென்கிற கௌரவமும், களித: - நழுவிவிட்டது, ஜீவிதஸமா: - உயிருக்கு சமமானவரும், ஸமானா: - சம வயதுள்ளவர்களான, ஸுஹ்ருத: - ஸ்நேகிதர்களும், ஸபதி - முன்னாலேயே, ஸ்வர்யாதா: - பரலோகம் போய்விட்டார்கள். சனை: - மெதுவாக, யஷ்ட்யுத்தானம் - கழியைப் பிடித்துக்கொண்டு எழுந்திருக்கும் நிலைமையும் உண்டாகிவிட்டது. நயனே - இரு கண்களும், கனதிமிராருத்தே - வலுவான இருட்டினால் மறைக்கப்பட்டுவிட்டன; ததபி - அப்படியிருந்தும், மூட:- முட்டாளான, காய: - சரீரமானது, மரணாபாயசகித: - மரணத்திற்குப் பயப்படுகிறது. அஹோ ஆச்சரியம்!

(9) விஷய ஸுகங்களில் ஆசையோ போய்விட்டது. கிழத்தனம் வந்த காரணத்தால் மனிதனுக்கு ஏற்பட்ட கௌரவம் போய்விட்டது. உயிருக்கு சமமான மித்ரர்கள் கிழத்தனத்திற்கு முந்தியே பாலோகம் போய்விட்டார்கள். கழியின் உதவியால்தான் மெதுவாக எழுந்திருக்க முடிகிறது. கண்கள் மறைக்கப்பட்டுவிட்டன. இவ்வளவிருந்தும் முட்டாளான இந்த சரீரமானது மரணத்தைக் கண்டு பயப்படுகிறது. இதைவிட ஆச்சரியம் உண்டோ!

आशा नाम नदी मनोरथजला तृष्णातरंगाकुला
रागग्राहवती वितर्कविहगा धैर्यद्रुमध्वंसिनी ।
मोहावर्तसुदुस्तरातिगहना प्रोत्तुङ्गचिन्तातटी
तस्याः पारगता विशुद्धमनसो नन्दन्ति योगीश्वराः ॥१०॥

ஆஶாநாம நதீ மனோரதஜலா
த்ருஷ்ணா தரங்காகுலா
ராகக்ராஹவதீ விதர்க்கவிஹகா
தைர்யத்ருமத்வம்ஸிநீ ।
மோஹாவர்த்த ஸுதுஸ்தரா
அதிகஹநா ப்ரோத்துங்க சிந்தாதடீ
தஸ்யா: பாரகதா: விசுத்த மநஸ:
நந்தந்தி யோகீஶ்வரா: ॥

ஆஶாநாம - ஆசையென்பது, நதீ - ஒரு ஆறு, மனோரதஜலா - மனோரதமென்பதை ஜலமாக உடையது, த்ருஷ்ணாதரங்காகுலா - துராசையாகிற அலையினால் கொந்தளிப்பை யடைந்தது, ராகக்ராஹவதீ - காமம், த்வேஷம் முதலிய முதலையுடன் கூடியது, விதர்க்கவிஹகா - விசாரமாகிற பக்ஷியுடன் கூடியது, தைர்ய த்ருமத்வம்ஸிநீ - தைர்யமாகிற மரத்தை வேரறுத்துத் தள்ளக்கூடியது, மோஹாவர்த்தஸுதுஸ்தரா - மோஹமாகிற சுழலினால் தாண்டக்கூடாதது, அதிகஹநா - மிகவும் ஆழமுள்ளது, ப்ரோத்துங்கசிந்தாதடீ - மிகவும் உயர்ந்த சிந்தையாகிற கரையை உடையது; தஸ்யா: - அந்த நதியினுடைய, பாரகதா: - கரையையடைந்தவர்களான, யோகீச்வரா: - மஹாயோகிகளான பெரியோர்கள், விசுத்தமநஸ: - சுத்தமான மனதுள்ளவர்களாகி, நந்தந்தி - சந்தோஷிக்கிறார்கள்.

(10) மனிதனுடைய ஆசையென்பது ஒரு நதியாக கவியால் இங்கு வர்ணிக்கப்படுகிறது. அந்த நதிக்கு மனோரதமென்பது ஜலமாகும். கிடைக்கக்கூடாத வஸ்துவின்பேரில் உண்டாகும் ஆசையானது அலையாக அமைந்துள்ளது. காமம், த்வேஷம் முதலியவை முதலையாகும். விசாரமென்பதே நீர்க்காக்கையாகும். அந்த நதியானது தைர்யமென்கிற மரத்தை வேரறுத்துத் தள்ளும். மோஹமென்கிற பெரும் சுழல்கள் இருப்பதால் அது தாண்ட முடியாதது. மிகவும் ஆழமுள்ளது. சிந்தையென்கிற உயரமான கரை உள்ளது. இத்தகைய நதியைத்தாண்டி கரையை அடைந்த யோகீச்வர்களே பரிசுத்த மனதுள்ளவர்களாகி சந்தோஷிப்பவர்கள்.

न संसारोत्पन्नं चरितमनुपश्यामि कुशलं
विपाकः पुण्यानां जनयति भयं मे विमृशतः ।
महद्भिः पुण्यौघैश्चिरपरिगृहीताश्च विषया
महान्तो जायन्ते व्यसनमिव दातुं विषयिणाम् ॥ ११ ॥

ந ஸம்ஸாரோத்பந்நம் சரிதமநுபஶ்யாமி குஶலம்
விபாக: புண்யாநாம் ஜநயதி பயம் மே விம்ருஶத: |
மஹத்பி: புண்யௌகை: சிரபரிக்ருஹீதாச்ச விஷயா:
மஹாந்த: ஜாயந்தே வ்யஸநமிவ தாதும் விஷயிணாம் ll

ஸம்ஸாரோத்பந்நம் - ஸம்ஸாரத்தினால் உண்டான,
சரிதம் - ஸதாசாரமானது, குஶலம் - க்ஷேமகரமாக, ந
அநுபஶ்யாமி - நான் காணவில்லை, புண்யாநாம் - புண்ய
கார்யங்களுடைய, விபாக: - பலனானது, விம்ருஶத: -
தீர்க்கமாக ஆலோசிக்கிற, மே - எனக்கு, பயம் - பயத்
தையே, ஜநயதி - கொடுக்கிறது; மஹத்பி: - பெரிதான,
புண்யௌகை: - புண்யஸமூகங்களால், சிரபரிக்ருஹீதா: -
நீண்டகாலமாக அநுபவிக்கப்பட்டுவருகிற, விஷயா: - இஹ
லோக போகங்கள், விஷயிணாம் - ஸம்ஸாரிகளுக்கு, வ்ய
ஸநமிவ - துக்கத்தையே, தாதும் - கொடுப்பதற்கு, மஹா
ந்த: - பெரியவைகளாக, ஜாயந்தே - ஆகின்றன,

கவி இந்த சதகத்தில் விஷயபரித்யாக பரிகாசம் செய்
கிறார். நீண்டகாலமாக ஸம்ஸாரத்தில் இருந்துகொண்டு
செய்த புண்ய காரியங்களுக்கு நல்லபலன் காணப்படவில்லை.
சில புண்ய கர்மங்களுடைய பலன்களை யோசித்தல் அவை
விவேகிகளுக்கு பயத்தையே கொடுக்கின்றன. நல்ல புண்
யங்களைச் செய்து ஐஹிக சுகங்களை அடைந்தாலும் அவை
காலக்ரமத்தில் வ்யஸநத்தையே கொடுக்கின்றன.

अवश्यं यातारश्चिरतरमुषित्वापि विषया
वियोगे को भेदस्त्यजति न जनो यत्स्वयममून् ।
व्रजन्तः स्वातन्त्र्यादतुलपरितापाय मनसः
स्वयं त्यक्ता ह्येते शमसुखमनन्तं विदधति ॥ १२ ॥

அவஶ்யம் யாதார: சிரதர முஷித்வாபி விஷயா:
வியோகே கோ பேத: த்யஜதி ந ஜநோ யஸ்த்வயமமூன் ।
வ்ரஜந்த: ஸ்வாதந்த்ரியாத் அதுலபரிதாபாய மநஸ:
ஸ்வயம் த்யக்தா ஹ்யேதே ஶமஸுகம்அனந்தம் விதததி ॥

விஷயா: - காம சுகங்கள், சிரதரம் - வெகுகாலம், உஷித்வாபி - நம்மிடம் வசித்தபோதிலும், அவஶ்யம் - நிச்சயமாக, யாதார: - போகக்கூடியவை; வியோகே - விட்டுப்போவதில், கோ பேத: - என்ன விசேஷம், ஜந: - மனிதன், ஸ்வயம் - தானுகவே, அமூந் - இந்த விஷய சுகங்களை, ந த்யஜதி யத் - விடவில்லையோ, ஸ்வாதந்த்ரியாத் - ஸ்வச்சந்தமாக, வ்ரஜந்த: - விட்டுப்போகிற அந்த சுகங்கள், மனஸ: - மனத்திற்கு, அதுலபரிதாபாய - நிகரற்ற துக்கத்தின்பொருட்டு ஆகின்றன; ஏதே - இந்த சுகங்கள், ஸ்வயம் த்யக்தா: - நம்மால் தானுக விடப்பட்டால், அனந்தம் - அதிகமான, ஶமஸுகம் - சாந்தி சுகத்தை, விதததி: - உண்டுபண்ணுகின்றனவல்லவா.

ஐஹிக சுகங்கள் யாவற்றும் நம்மிடம் வெகுகாலம் இருந்த போதிலும் ஒரு காலத்தில் நம்மை விட்டு அவை தானுகவே நிச்சயமாக விலகிப்போய் விடுகின்றன. மனிதன் தானுகவே அவைகளை ஏன் விடக்கூடாது? பிரிந்துபோவது நிச்சயமல்லவா. தானுக விஷய சுகங்கள் நம்மைவிட்டு விலகிப் போனுல் மனதிற்கு பெரிய தாபத்தை கொடுக்கின்றன. நாமாக அவைகளை விட்டாலோ அளவற்ற சாந்தி சுகத்தைக் கொடுக்கின்றன.

ब्रह्मज्ञानविवेकनिर्मलधियः कुर्वन्त्यहो दुष्करं
यन्मुञ्चन्त्युपभोगभाञ्ज्यपि धनान्येकान्ततो निःस्पृहाः ।
संप्राप्तान्न पुरा न संप्रति न च प्राप्तौ दृढप्रत्यया-
न्वाञ्छामात्रपरिग्रहानपि परं त्यक्तुं न शक्ता वयम् ॥

ப்ருஹ்மக்ஞான விவேகநிர்மலதிய:
குர்வந்தி அஹோ துஷ்கரம்
என்முஞ்சந்தி உபபோக பாஞ்ச்யபி தநாநி
ஏகாந்ததோ நிஸ்ப்ருஹா: ।
ஸம்ப்ராப்தான் ந புரா ந ஸம்பிரதி
நச ப்ராப்தேன த்ருடப்ரத்ய யாந்
வாஞ்சாமாத்ர பரிக்ரஹாநபி
பரம் த்யக்தும் ந ஶக்தாவயம் ॥

ப்ருஹ்மக்ஞாநவிவேகநிர்மலதிய: - ப்ரும்மக்ஞானத்தி னாலும் விவேகத்தினாலும் பரிசுத்தமான மனதுடைய பெரி யோர்கள், ஏகாந்தத: - உறுதியாக, நிஸ்ப்ருஹா: - வைரா க்ய மடைந்தவர்களாகி, உபபோகபாஞ்ச்யபி - தன்னால் அனு பவிக்கப்பட்டுவருகிற, தநாநி - தனங்களை, முஞ்சந்தி யத் - விடுகிறவர்களென்பதானது, துஷ்கரம் - கஷ்டமான காரி யத்தை, குர்வந்தி - செய்கிறார்கள், அஹோ - ஆச்சரியம்! புரா - முன்னாலே, ந ஸம்ப்ராப்தாந் - கிடைக்காதவைகளும், ஸம்பிரதி - இப்பொழுது கிடைப்பதிலும், ந த்ருடப்ரத்ய யாந் - நம்பிக்கை வைக்கமுடியாதவைகளும், வாஞ்சாமா த்ரபரிக்ரஹாந் - மனோரதத்தால் மாத்திரம் அடையக்கூடிய வைகளுமான, தநாநி - பணங்களை, த்யக்தும் - விடுவதற்கும், வயம் - நாம், பரம் - மிகவும், ந ஶக்தா: - முடியாதவர்க ளாயிருக்கிறோம்.

பிரும்ஹக்ஞானமாகிற விவேகம் பெற்று மனம் சுத் திபெற்ற பெரியோர்கள் தாங்கள் அனுபவித்து வரும் பணங் களைக்கூட வைராக்யத்தால் ஒரு சமயம் உதறித்தள்ளி விடு

வார்கள். நாமோவென்றால் இதற்குமுன் கிடைக்காததும் இனி கிடைக்குமென்ற நம்பிக்கை வைக்கமுடியாததும் கேவலம் மனோரதமாத்திரத்தால் அடைந்துள்ளதுமான பணத்தைக்கூட விடுவதற்கு சக்தியற்றவர்களாயிருக்கிறோம்.

धन्यानां गिरिकन्दरेषु वसतां ज्योतिः परं ध्यायता
मानन्दाश्रुकणान्पिबन्ति शकुना निःशङ्कमङ्केशयाः ।
अस्माकं तु मनोरथोपरचितप्रासादवापीतट-
क्रीडाकाननकेलिकौतुकजुषामायुः परं क्षीयते ॥ १४ ॥

தன்யாநாம் கிரி கந்தரேஷு
வஸதாம் ஜ்யோதி: பரம் த்யாயதாம்
ஆனந்தாஸ்ருகணாந் பிபந்தி சகுநா:
நிஸ்ஸங்கம் அங்கேசயா: |
அஸ்மாகம் து மனோரதோபரசித
ப்ராஸாத வாபீ தட
க்ரீடாகானன கேளிகௌதுக ஜுஷாம்
ஆயு: பரம் க்ஷீயதே ||

கிரிகந்தரேஷு - மலை குகைகளில், வஸதாம் - வஸிக்கிறவர்களும், பரம்ஜ்யோதி: - உயர்ந்த ஜோதிஸ்லை, த்யாயதாம் - த்யாநம் பண்ணுகிறவர்களுமான, தன்யாநாம் - பாக்யசாலிகளான பெரியோர்களுடைய, ஆனந்தத்தால் பெருகுகிற கண் ஜலங்களை, ஆனந்தாஸ்ருகணான் - அவர்கள் மடியில் உட்கார்ந்துள்ள, அங்கேசயா: - சகுநா: - பக்ஷிகள், நிஸ்ஸங்கம் - பயமற்று, பிபந்தி - குடிக்கின்றன, மனோரத - வெறும் எண்ணத்தால், உபரசித - செய்துகொள்ளப்பட்ட, ப்ராஸாத - உப்பரிகையென்ன, வாபீதட - குளமென்ன, க்ரீடாகானன - விளையாட்டு உத்யானமென்ன, இவைகளில், கேளிகௌதுக - விளையாடும் உத்ஸாகத்தை, ஜுஷாம் - அடைந்துள்ள, அஸ்மாகந்து-நமக்கோவென்றால், ஆயு: பரம்- ஆயுஸ்தான், க்ஷீயதே - குறைகிறது.

மலைக் குஹைகளில் தவம்செய்து பரஞ்ஜ்யோதிஸ்ஸை த்யானம் செய்யும் பெரியோர்களுக்கு அந்த ஆனந்தத்தால் அளவற்ற கண்ணீர் பெருகுகிறது. அந்த கண் ஜலங்களை, அவருடைய மடியில் பயமற்று உட்கார்ந்திருக்கிற பக்ஷிகள் பருகுகின்றன. வைராக்யசாலிகள் இவ்வளவு பாக்கியசாலிகளாய் இருக்கின்றனர். நமக்கோவென்றால் வெறும் ஸொப்பனத்தில் மாடி, குளம், உத்யானம் இவைகளில் விளையாடுவது போல் மனோரதம் பண்ணுபவர்களுக்கு ஆயுஸ் தான் குறைகிறதேயல்லது, ஆசை நிறைவேறுவதில்லை.

भिक्षाशनं तदपि नीरसमेकवारं
शय्या च भूः परिजनो निजदेहमात्रम् ।
वस्त्रं विशीर्णशतखण्डमयी च कन्था
हा हा तथापि विषया न परित्यजन्ति ॥ १५ ॥

பிக்ஷாசனம் ததபி நீரஸம் ஏகவாரம்
ஶய்யா ச பூ: பரிஜனோ நிஜதேஹமாத்ரம் |
வஸ்த்ரம் விசீர்ண சதகண்டமயீ ச கந்தா
ஹாஹா ததாபி விஷயா: ந பரித்யஜந்தி ||

அசனம் - சாப்பாடானது, பிக்ஷா - பிச்சையினால், ததபி - அதுவும், நீரஸம் - ரஸமற்றது. ஏகவாரம் - ஒரு வேளையே; பூ:- பூமிதான், ஶய்யா - படுக்கை, பரிஜந:- வேலைக்காரனும், நிஜதேஹமாத்ரம் - தன்னுடைய சரீரம் மட்டுமே. வஸ்த்ரம் - வஸ்த்ரமோவென்றால், விசீர்ண-கிழிந்ததும், சதகண்டமயீ - நூறு ஓட்டுள்ள, கந்தா - கந்தை; ததாபி - இந்த ஸ்திதியிலும், விஷயா: - இஹ ஸுகங்கள், ந பரித்யஜந்தி-மனிதனை விடுவதில்லை! ஹாஹா- ஆச்சரியம்!

15 மனிதன் பிக்ஷையினால் ஜீவிக்கிறான். அதுவும் ஒரு வேளையே. படுக்கையும் பூமிதான். தானே தான் தனக்கு

வழியன். வஸ்திரமோ, கிழிந்த கந்தை, இந்த அவஸ்தையிற் கூட அவனை விஷய ஆசைகள் விடுவதில்லை.

स्तनौ मांसग्रन्थी कनककलशावित्युपमितौ
मुखं श्लेष्मागारं तदपि च शशाङ्केन तुलितम् ।
स्रवन्मूत्रक्लिन्नं करिवरशिरःस्पर्धि जघनं
मुहुर्निन्द्यं रूपं कविजनविशेषैर्गुरु कृतम् ॥ १६ ॥

ஸ்தனௌ மாம்ஸக்ரந்தீ
கனக கலசா வித்யுபமிதௌ
முகம் ச்லேஷ்மாகாரம்
ததபி ச மஸாங்கேன துலிதம் |
ஸ்ரவன் மூத்ரக்லின்னம் கரிவர
மிரஸ்பர்தி ஜகனம்
முஹு: நிந்த்யம் ரூபம் கவிஜன
விசேஷை: குரு கிருதம் ||

ஸ்தனௌ - ஸ்தனங்கள், மாம்ஸக்ரந்தீ - மாம்ஸபிண்டம் போன்றவை, கனக கலஶாவிதி - தங்கக்குடம்போலென்று, உபமிதௌ-உவமை செய்யப்படுகின்றன. முகம் - முகமோ வென்றால், ச்லேஷ்மாகாரம்-கபம் முதலிய எச்சலுக்கு இருப் பிடம், ததபி - அப்படியிருந்தும், ஶஶாங்கேந - சந்திரனு டன், துலிதம் - ஸமமாக வர்ணிக்கப்படுகிறது. ஜகனம் - இடுப்பு ப்ரதேசமானது, ஸ்ரவன் - ஸ்ரவிக்கிற, மூத்ரம் - மூத்ரத்தால், க்லின்னம் - நனைந்துள்ளது. ததபி - அப்படி இருந்தும், கரிவர - யானையினுடைய, மிரஸ்பர்தி - சிரஸ் ஸுக்கு ஸமானமாக வர்ணிக்கப்படுகிறது. நிந்த்யம் - நிந் திக்கப்படவேண்டிய, ரூபம் - இந்திரியமானது, கவிஜன விசேஷை: - கவிகளுடைய கல்பனைகளால், முஹு: - அடிக் கடி, குரு - உயர்ந்ததாக, க்ருதம் - செய்யப்பட்டுவிட்டது.

16 ஸ்த்ரீகளுடைய ஒவ்வொரு அவயவமும் விவேகி களால் நிந்திக்கத் தகுந்ததாக இருக்கையிலும், கவி களுடைய கற்பனையினால் உயர்ந்தவைகளாகச் செய்யப்பட்டு விட்டன. மாம்ஸபிண்டங்களான ஸ்தனங்களை தங்கக்குடத் திற்கு ஸமமாக வர்ணிக்கப்படுகிறது. கபம் முதலிய அசுத் தம் நிறைந்த முகமானது சந்திரனோடு ஒப்பிடப்படுகிறது. மூத்ராதிகளால் அசுத்தமான கடிப்ரதேசமானது யானை யின் சிரஸுக்கு ஸமமாகச் சொல்லப்படுகிறது. இவ்வாறெல் லாம் தோஷங்களை கவிகள் குணம் போல் ஆக்கிவிட்டனர்.

एको रागिषु राजते प्रियतमादेहार्धहारी हरो
नीरागेषु जनो विमुक्तललनासङ्गो न यस्मात्परः ।
दुर्वारस्मरबाणपन्नगविषव्याविद्धमुग्धो जनः
शेषः कामविडम्बितान् न विषयान्भोक्तुं न मोक्तुं क्षमः ॥

ஏகோ ராகிஷு ராஜதே
ப்ரியதமாதேஹார்த்த ஹாரீ ஹர:
நீராகேஷு ஜந: விமுக்த
லலனாஸங்க: ந யஸ்மாத் பர: ।
துர்வாரஸ்மரபாணபந்நக
விஷவ்யாவித்த முக்த: ஜன:
சேஷ: காமவிடம்பிதாந் ந விஷயாந்
போக்தும் ந மோக்தும் க்ஷம: ॥

ராகிஷு - காமுகர்களில், ப்ரியதமா - பார்யையான பார்வதியுடைய, தேஹார்த்த - பாதி சரீரத்தை, ஹாரீ - ஸ்வாதீனப்படுத்திக்கொண்ட, ஹர: - சிவன், ஏக: - ஒரு வனாக, ராஜதே - விளங்குகிறான். நீராகேஷு - வைராக்ய சாலிகளுக்குள், விமுக்த - விட்ட, லலநாஸங்க: - ஸ்த்ரீஸம் பந்தத்தையுடைய, ஜந: - மனிதனும், யஸ்மாத்பர: - சிவனைத்

தவிர, ந - இல்லையோ, சேஷ: ஜந: - மற்ற ஜநம், துர்வார - தடுக்கமுடியாத, ஸ்மரபாண-மன்மதபாணமாகிற, பந்நகவிஷ-பாம்பின் விஷத்தால், வ்யாவித்த - தாக்கப்பட்டும், முக்த: - மயக்கமடைந்தவனாய், காமவிடம்பிதாந் - மன்மதனால் பரிஹஸிக்கப்பட்ட, விஷயாந் - காமஸுகங்களை, போக்தும்-அனுபவிப்பதற்கும், மோக்தும் - விடுவதற்கும், ந க்ஷம: - சக்தியற்றது.

17 பரமசிவன் அர்த்தநாரீச்வரனாயிருப்பதால் காமுகர்களுக்குள் ஒருவராயும் தோன்றுகிறார். அவரே ஸ்திரீ ஸம்பந்தத்தைவிட்ட வைராக்யசாலிகளுக்குள் முதல்வராயும்இருக்கிறார். மற்ற ஜனங்களோவென்றால் மன்மதபாண விஷத்தால் தாக்கப்பட்டு மோஹமடைந்து, காமஸுகங்களை பூர்ணமாக அனுபவிப்பதற்கோ அடியோடு விலக்குவதற்கோ சக்தியற்றவர்கள்

अजानन्दाहात्म्यं पततु शलभस्तीव्रदहने
स मीनोऽप्यज्ञानाद्बडिशयुतमश्नातु पिशितम् ।
विजानन्तोऽप्येते वयमिह विपज्जालजटिला-
न्न मुञ्चामः कामानहह ! गहनो मोहमहिमा ॥ १८ ॥

அஜாநந் தாஹாத்ம்யம்
பதது ஶலப: தீவ்ர தஹநே
ஸ மீநோபி அக்ஞாநாத்
படிஶயுதம் அச்நாது பிஶிதம் ।
விஜாநந்தோபி ஏதே வயமிஹ
விபஜ்ஜால ஜடிலாந் ந
முஞ்சாம: காமாந் அஹஹ
கஹநோ மோஹமஹிமா ॥

சலப: - விளக்கட்டுப்பூச்சி, தாஹாத்மியம் - கொளுத்தும் சுபாவத்தை, அஜாநந் - அறியாமலே, தஹநே - நெருப்பில், பதது - விழட்டும். ஸ: - அந்த, மீனோபி - மீனும், அக்ஞாநாத் - அறியாமையால், படிஶயுதம் - தூண்டிமுள்ளுடன் கூடிய, பிசிதம் - மாம்ஸத்தை, அஶ்நாது - சாப்பிடட்டும், வயம் - நாமோவென்றால், விஜாநந்தோ'பி - அறிந்தவர்களாயிருந்தும், விபஜ்ஜாலஜடிலாந் - ஆபத்துக்கள் நிறைந்த, காமாந் - காமஸுகங்களை, ந முஞ்சாம: - விடாமலிருக்கிறோம்! மோஹமஹிமா - மோஹத்தின் கௌரவமானது, கஹந; - அறிய முடியாதது, அஹ: - ஆச்சரியம்!

விளக்கட்டுப்பூச்சியானது நெருப்பின் ஸுபாவந்தெரியமானதும் தெரியாமலே அதில் விழுகிறது. மீனும் அறியாமலேயே தூண்டில்முள்ளை கௌவுகிறது. ஆனால்,மனிதர்களாகிற நாமோவென்றால் காமஸுகங்கள் ஆபத்து நிறைந்தவையென்று அறிந்தும்கூட விடாமலிருக்கிறோம். மோஹத்தின் மஹிமை அறியமுடியாதது.

तृषा शुष्यत्यास्ये पिबति सलिलं शीतमधुरं
क्षुधार्तः शाल्यन्नं कवलयति मांसादिकलितम् ।
प्रदीप्ते कामाग्नौ सुदृढतरमालिङ्गति वधूं
प्रतीकारं व्याधेः सुखमिति विपर्यस्यति जनः ॥ १९ ॥

த்ருஷா சுஷ்யதி ஆஸ்யே பிபதி ஸலிலம் சீதமதுரம்
க்ஷுதார்த்த: ஶால்யந்நம் கவலயதி மாம்ஸாதி கலிதம் 1
ப்ரதீப்தே காமாக்நௌ ஸுத்ருடதரம் ஆலிங்கதி வதூம்
ப்ரதீகாரம் வியாதே: ஸுகமிதி விபர்யஸ்யதி ஜந: 11

ஆஸ்யே - வாயானது, த்ருஷா - தாகத்தினால், சுஷ்யதி - உலரும் போது, சீதமதுரம் - குளிர்ந்து ருசியுள்ள, ஸலிலம் - ஜலத்தை, பிபதி - குடிக்கிறான். க்ஷுதார்த்த: -

பசியினால் வருந்தியவன், மாம்ஸாதி கலிதம் - மாம்ஸம் முதலியதோடு கூடின, ஶால்யன்னம் - சம்பா அரிசி சாதத்தை, கபளயதி - சாப்பிடுகிறான். காமாக்னௌ - காமமென்கிற நெருப்பானது, ப்ரதீப்தே - எரியும் பொழுது, வதூம் - ஸ்திரீயை, த்ருடதரம் - கெட்டியாக, ஆலிங்கதி - கட்டிக் கொள்கிறான். வ்யாதே: - வியாதிக்கு, ப்ரதீகாரம்-பரிகாரமா யுள்ள மேற்கண்டவைகளை, ஸுகமிதி - ஸுகமென்று, ஜன: - மனிதன், விபர்யஸ்யதி - விபரீதமாக நினைக்கிறான்.

தாஹமெடுக்கும் போது தண்ணீர் குடிப்பதும், பசி ஏற்படும் போது அன்னம் சாப்பிடுவதும், காமம் அதிகரிக்கும் போது ஸ்திரீயை ஆலிங்கனம் செய்வதும் மேற்கண்ட வியாதிகளுக்கு பரிஹாரம் போன்றவையல்லது ஸுகமில்லை. மனிதன் அதை ஸுகமென்று விபரீதமாக நினைக்கிறான்.

तुङ्गं वेश्म सुतः सतामभिमताः संख्यातिगाः संपदः
कल्याणी दयिता वयश्च नवमित्यज्ञानमूढो जनः ।
मत्वा विश्वमनश्वरं निविशते संसारकारागृहे
संदृश्य क्षणभङ्गुरं तदखिलं धन्यस्तु संन्यस्यति ॥

துங்கம் வேச்ம ஸுத: ஸதாம்
அபிமதா: ஸங்க்யாதிகா: ஸம்பத:
கல்யாணீ தயிதா வயஶ்ச
நவமிதி அக்ஞானமூடோ ஜந: |
மத்வா விச்வம் அநஶ்வரம்
நிவிஶதே ஸம்ஸார காராக்ருஹே
ஸந்த்ருஶ்ய க்ஷணபங்குரம் ததகிலம்
தன்யஸ்து ஸம்ந்யஸ்யதி ||

துங்கம் வேச்ம - உயர்ந்த வீடு, ஸுத: - பிள்ளைகள், ஸதாமபிமதா: - பெரியோர்களுக்கு பிடித்தவர்கள். ஸம்பத்துக்கள், ஸங்க்யாதிகா: - கணக்கற்றவை; ஸம்பத:- பார்வை, கல்யாணீ - அழகுடையவள். தயிதா - மனைவி இருப்பவள், வய: - வயது

நவம் - புதியது, இதி - இப்படியெல்லாம், அக்ஞான மூட: - அக்ஞானத்தால் மோஹித்த, ஜந: - மனிதன், விச்வம் - உலகத்தை, அஸ்வரம் - நாசமற்றதாக, மத்வா - நினைத்து, ஸம்ஸாரகாராக்ருஹே - ஸம்ஸாரமாகிற ஜெயிலில், நிவிஶதே - பிரவேசிக்கிறான். தன்யஸ்து - ஞானியோவென்றால், தத் - மேற்கண்டவை எல்லாவற்றையும், க்ஷணபங்குரம் - க்ஷணத்தில் நாசமடையக்கூடியதாக, ஸந்த்ருச்ய - அறிந்து கொண்டு, ஸந்யஸ்யதி - ஸந்யாஸம் போகிறான்.

அக்ஞானத்தினால் மோஹித்த மூட மனிதன், வீடு, பிள்ளை, ஸம்பத்து, ஸம்ஸாரம், யௌவனம் இவைகளைக்கண்டு பிரமித்து எல்லாம் நித்யமென்று நினைத்து ஸம்ஸாரகாரகிருஹத்தில் நுழைகிறான். ஞானியான மனிதனோவென்றால் மேற்கண்டவையனைத்து மநித்யமென்று உணர்ந்து வைராக்யத்தை அடைகிறான்.

दीना दीनमुखैः सदैव शिशुकैराकृष्टजीर्णाम्बरा
क्रोशद्भिः क्षुधितैर्निरन्नविधुरा दृश्या न चेद्गेहिनी ।
याच्ञाभङ्गभयेन गद्गदगलत्त्रुट्यद्विलीनाक्षरं
को देहीति वदेत्स्वदग्धजठरस्यार्थे मनस्वी पुमान् ॥

தீனா தீனமுகை: ஸதைவ
சிசுகை: ஆக்ருஷ்ட ஜீர்ணாம்பரா
க்ரோசத்பி: க்ஷுதிதை: நிரந்ந
விதுரா த்ருஶ்யா நசேத் கேஹினீ ।
யாச்ஞாபங்க பயேந கத்கத
களத்ருட்யத் விலீநாக்ஷரம்
கோதேஹீதி வதேத் ஸ்வதக்த ஜடரஸ்ய
அர்த்தே மனஸ்வீ புமான் ॥

க்ஷுதிதை: - பசியினால் பீடிக்கப்பட்டவைகளும், தீன முகை: - வாடிய முகங்களையுடையவைகளும், க்ரோசத்பி: - அழுதுகொண்டிருப்பவைகளுமான, சிசுகை: - குழந்தைகளால் ஆக்ருஷ்ட ஜீர்ணாம்பரா - இழுக்கப்பட்ட கந்தைப்புடவையை

உடையவளும், தீனு - வாடிய முகத்துடன் இருப்பவளு'மான கேஹினீ - பார்யையானவள், த்ருஶ்யா ஈசேத் - கண்ணில் படாமலிருந்தால், மனஸ்வீ - மானமுள்ள, க: புமார் - எந்த மனிதன் தான், ஸ்வதக்தஜடாஸ்யார்த்தே-தன துவயறுக்காக, யாச்ஞாபங்கபயேக - யாசகம் பலிக்காதென்கிற பயத்தினுல், கத்கத - தழதழத்ததும், களத் - நழுவியதும், த்ருட்யத் - சிதறியதும், விலீன - மறைந்ததுமான, அக்ஷரம் - அக்ஷ ரத்தோடு கூடியபடி, தேஹீதி - யாசகம் கொடு என்று, வதேத் - சொல்லுவான் ?

பசியெடுத்த குழந்தைகள் பசியினுல் அழுதுகொண்டும் வாடிய முகத்துடனும் தாயாரை பின் தொடர்ந்து அவளு டைய கந்தைப்புடவையை இழுக்க அதனுல் முகம் வாடி அன் னமில்லாமல் கஷ்டப்படும் பார்யைப்பார்த்தாலல்லது எந்த மானமுள்ள மனிதன் தான் யாசகம் கொடு என்று கேட்கத் துணிவான்! தனது யாசகம் பலிக்காதோ என்ற சங்கை ஏற்பட்டு அதனுல் வாய்குளறி தழதழத்த குரலுடன் கேட் பானு? மானமுள்ளவன் எவனும் யாசகம் கேட்கமாட்டா னென்று கருத்து.

अभिमतमहामाननग्रन्थिप्रभेदपटीयसी
गुरुतरगुणग्रामाम्भोजस्फुटोज्ज्वलचन्द्रिका ।
विपुलविलसल्लज्जावल्लीवितानकुठारिका
जठरपिठरी दुष्पूरेयं करोति विडम्बनम् ॥ २२ ॥

அபிமத மஹாமான க்ரந்தி
ப்ரபேத படீயஸீ
குருதர குணக்ராமாம் போஜ
ஸ்புடோத் ஜ்வல சந்த்ரிகா |
விபுல விலஸத்
லஜ்ஜாவல்லீ விதானகுடாரிகா
ஜடரபிடரீ துஷ்பூரேயம்
கரோதி விடம்பனம் ||

7

அபிமத - வேண்டப்பட்ட, மஹாமான - பெரியகௌர
வமாகிற, க்ரந்தி - முடிச்சை, ப்ரபேத - பிளப்பதில், படு
யஸீ - ஸாமர்த்திய முள்ளதும், குருதர - கௌரவமுள்ள,
குணக்ராம - ஸத்குணகூட்டமாகிற, அம்போஜ - தாமரைப்
பூக்களுக்கு, ஸ்புட - தெளிவாயும், உஜ்வல - அதிகமாக பிர
காசிக்கிற, சந்த்ரிகா - நிலாபோன்றதும், விபுல - விஸ்தார
மாக, விலஸத் - விளங்குகிற, லஜ்ஜாவல்லீ - லஜ்ஜையாகிற
கொடியினுடைய, விதான - ஸமூகத்திற்கு, குடாரிகா -
கோடாரி போன்றதுமான, ஜடரபிடரீ - வயறுகிற கூடை
யானது, துஷ்பூரா - நிரப்பமுடியாததாய்க்கொண்டு, விடம்
பநாம் - அவமானத்தை, கரோதி - செய்கிறது.

மனிதனுக்கு ஒரு சாண் வயிறானது பூர்ணம் செய்ய
முடியாமல் பல விதத்திலும் அவனை அவமானப்படுத்து
கிறது. ஆகவே இந்த வயிறானது மனிதனுடைய பெரிய
கௌரவத்தை பிளக்கிறது. உயர்ந்த குணமாகிற தாமரைப்
பூவுக்கு சந்திரிகை போலிருந்து நாசமாக்குகிறது. மனி
தனுடைய விரிவான வெட்கமென்கிற கொடிக்கு கோடாரி
போல் இருக்கிறது.

पुण्ये ग्रामे वने वा महति सितपटच्छन्नपालिं कपालिं
ह्यादाय न्यायगर्भद्विजहुतहुतभुग्धूमधूम्रोपकण्ठे ।
द्वारं द्वारं प्रविष्टो वरमुदरदरीपूरणाय क्षुधार्तो
मानी प्राणैः सनाथो न पुनरनुदिनं तुल्यकुल्येषु दीनः ॥

புண்யே க்ராமே வநே வா மஹதி
ஸிதபடச் சன்ன பாலிம் கபாலிம்
ஹ்யாதாய ந்யாய கர்ப்ப த்விஜஹுத
ஹுதபுக் தூம தூம்ரோபகண்டே |
த்வாரம் த்வாரம் ப்ரவிஷ்டோ
வரமுதர தரீபூரணாய க்ஷுதார்த்த:
மாநீ ப்ராணை: ஸநாதோ
ந புனரனுதினம் துல்ய குல்யேஷு தீந: ||

ந்யரயகர்ப்ப-சாஸ்திரத்தை அநுஸரித்த, த்விஜஹூத-ப்ராஹ்மணனால் ஹோமம் செய்யப்பட்ட, ஹூதபுக் - அக்னியினுடைய, தூம - புகையினால், தூம்ர - கருத்த, உபகண்டே - ஸ்தலங்களையுடைய, புண்யே - புண்யமான, க்ராமே - கிராமத்திலோ, மஹதி - பெரிய, வநேவா - காட்டிலோ, ஸித - வெளுப்பான, பட - வஸ்திரத்தால், ச்சன்ன - மூடப்பட்ட, பாலிம் - பிரதேசத்தையுடைய, கபாலம் - கபாலத்தை, ஆதாய - எடுத்துக்கொண்டு, ப்ராணைஸ் ஸநாத: - பிராணனோடு கூடிய, மாநீ - மானமுள்ள மனிதன், உதரதரீபூர்ணாய - வயிறுகிற குழியை நிரப்பும் பொருட்டு, க்ஷுதார்த்த: - பசியால் வாடி, த்வாரம் த்வாரம் - ஒவ்வொரு வீடாக, அநுதினம் - ஒவ்வொரு நாளும், ப்ரவிஷ்ட: - பிரவேசிப்பவன்கூட, வரம் - உயர்ந்தவன், துல்ய குல்யேஷு - ஸமமான குடும்பஸ்தர்களின் நடுவில், தீன: - ஏழையாயிருப்பது, ந புன: - உயர்ந்ததில்லை.

கௌரவமுள்ள மனிதன் பசியால் வாடியபோதிலும் கபாலத்தை கையில்கொண்டு, பட்டணத்திலும் காட்டிலும் பிக்ஷையெடுத்து வயறு வளர்ப்பதே கௌரவம். ஸமாந குடும்பஸ்தர்களின் முன்னிலையில் ஏழ்மையுடன் வாழ்வது ச்ரேஷ்டமன்று.

गङ्गातरङ्गकणशीकरशीतलानि
विद्याधराध्युषितचारुशिलातलानि ।
स्थानानि किं हिमवतः प्रलयं गतानि
यत्सावमानपरपिण्डरता मनुष्याः ॥ २४ ॥

கங்கா தரங்க கணசீகர சீதலாநி
வித்யாதரா த்யுஷித சாரு ஶிலாதலாநி ।
ஸ்தானநி கிம் ஹிமவத: ப்ரலயம் கதாநி
யத்ஸாவமாந பரபிண்டரதா மநுஷ்யா: ॥

கங்கா - கங்கையினுடைய, தரங்க - அலையின், கண சீகர - திவலையினால், சீதலாநி - குளிர்ந்தவைகளும், வித்யா தர - வித்யாதரர்களால், அத்யுஷித - வஸிக்கப்பட்ட, சாரு- அழகிய, ஶிலாதலாநி - கல் பிரதேசங்களுடைய, ஹிமவத:- ஹிமவத் பருவதத்தினுடைய, ஸ்தாநாநி - இடங்கள், பிரள யங்கதாநி கிம் - மறைந்து விட்டதா என்ன? யத் - ஏனென் றால், மனுஷ்யா: - மனிதர்கள். ஸாவமான - அவமானத் தோடுகூடின, பரபிண்ட - பிறர் அன்னத்தில், ரதா: - ஆசை யுள்ளவர்களாயிருக்கிறார்களே !

கங்கா ஜலத்தினால் குளிர்ந்தவைகளும், வித்யாதரர் களால் வஸிக்கப்பட்டவைகளுமான ஹிமாலய பிரதேசங்கள் மறைந்துவிட்டனவா? அவமானத்துடன்கூடிய பரான்னத்தை மனிதர்கள் ஏன் ஆசைப்படவேண்டும்? இதைவிட்டு மேற் கண்ட ஹிமாலயத்தில் கௌரவ ஜீவனம் செய்யலாமல்லவா?

किं कन्दाः कन्दरेभ्यः प्रलयमुपगता निर्झरा वा गिरिभ्यः
प्रध्वस्ता वा तरुभ्यः सरसफलभृतो वल्कलिन्यश्च शाखाः ।
वीक्ष्यन्ते यन्मुखानि प्रसभमपगतप्रश्रयाणां खलानां
दुःखाप्तस्वल्पवित्तस्मयपवनवशानर्तितभ्रूलतानि ॥ २५ ॥

கிம்கந்தா: கந்தரேப்ய: ப்ரலய
முபகதா நிர்ஜரா வா கிரிப்ய:
ப்ரத்வஸ்தா வா தருப்ய: ஸரஸ பலப்ருதோ:
வல்கலின்யஶ்ச ஶாகா: ।
வீக்ஷ்யந்தே யன்முகாநி ப்ரஸபமபகத
ப்ரஶ்ரயாணாம் கலாநாம்
துக்காப்த ஸ்வல்பவித்தஸ்மயபவன வஶா
நர்த்தித ப்ரூலதாநி ॥

கந்தரேப்ய: - குகைகளிலிருந்து, கந்தா: - கிழங்குமுத லியவை, பிரளயம் - நாசத்தை, உபகதா: கிம் - அடைந்து விட்டனவா என்ன? கிரிப்ய: - மலைகளிலிருந்து, நிர்ஜரா:-

மலையருவிகள், ப்ரத்வஸ்தாவா - மறைந்து விட்டனவா என்ன? ஸரஸபலபிருத: - ரஸமான பழங்களுடன் கூடின, வல்கலின்ய: - மரையருவியுள்ள, சாகா: - கிளைகள், தருப்ய:- விருக்ஷங்களிலிருந்து நசித்துவிட்டனவா? யத் - ஏனென்றால் அபகதப்ராஸ்ரயாணும் - விநயமற்றவர்களான, கலாநாம் - துஷ்டர்களுடைய, நக்ராப்த - சிரமத்தால் கிடைத்த, ஸ்வல்பவித்த - அல்பதனத்திலுடைய, ஸமய - சர்வமாகிற, பவநவச - காற்றினால், ஆவர்த்தித - அசைக்கப்பட்ட, ப்ருலதாநி - இமைகளையுடைய, முகாநி - முகங்கள், வீக்ஷ்யந்தே - பார்க்கப்படுகின்றனவே!

குகையில் கிடைக்கும் கிழங்குகள் போய்விடவில்லை. மலைகளிலுள்ள மலையருவிகளோ, விருக்ஷங்களிலுள்ள உயர்ந்த பழத்துடன் கூடியகிளைகளோ, மரையுருவிகளோ நசித்துவிடவில்லை. இப்படியிருக்க அல்ப பணம் படைத்த துஷ்டர்களுடைய அசையும் இமையுடன் கூடிய முகங்களை பெரியோர்கள் ஏன் பார்க்கவேண்டும்!

पुण्यैर्मूलफलैस्तथा प्रणयिनीं वृत्तिं कुरुष्वाधुना
भूशय्यां नवपल्लवैरकृपणैरुत्तिष्ठ यावो वनम् ।
क्षुद्राणामविवेकमूढमनसां यत्रेश्वराणां सदा
वित्तव्याधिविकारविह्वलगिरां नामापि न श्रूयते ॥ २६ ॥

புண்யை: மூலபலை: ததா
ப்ரணயிநீம் வ்ருத்திம் குருஷ்வாதுநா
பூசய்யாம் நவபல்லவை:
அக்ருபணை: உத்திஷ்ட யாவோ வனம் |
க்ஷுத்ராணும் அவிவேக மூடமநஸாம்
யத்ரேச்வராணும் ஸதா
வித்தவ்யாதி விகார விஹ்வலகிராம்
நாமாபி ந ஶ்ரூயதே ||

புண்யை: - பரிசுத்தங்களான, மூலபலை: - கிழங்கு
களாலும், பழங்களாலும், ப்ரணயிநீம் - ஸுகரமான,
வ்ருத்திம் - ஜீவனத்தை, அதுநா - இப்பொழுது, குருஷ்வ-
செய். நவபல்லவை:- புதிய துளிர்களால், அக்ருபணை:-
வாடாதவைகளால், பூசய்யாம் - பூமியில் படுக்கையை,
குருஷ்வ - செய்துகொள், உத்திஷ்ட - எழுந்திரு, வனம்
யாவ: - காட்டை அடைவோம், யத்ர-எங்கு, க்ஷுத்ராணும்
அல்பர்களும், அவிவேகமூடமநஸாம் - விவேகமில்லாததால்
மோஹமடைந்த மனதை உடையவர்களும், ஸதா - எப்
பொழுதும், வித்த - பணமாகிற வ்யாதி - வியாதியினாலே,
விகார - விபரீதமாயும், விஹ்வல - உருவில்லாததாயுமிருக்
கிற, கிராம் - பேச்சையுடைய, ஈச்வராணும் - பணக்காரர்
களுடைய, நாமாபி - பெயர்களும், கஸ்ரூயதே - கேழ்கப்
படாதோ.

வைராக்யமடைந்த ஒருவன் தனது மித்ரனுக்கு உப
தேசிப்பதாவது ? மித்ரனே! பரிசுத்தமான கிழங்குகளாலும்
பழங்களாலும் ஸுகரமான ஜீவனத்தை செய்வாயாக,
எழுந்திரு. காட்டிற்குப் போவோம். வாடாத புதிய தளிர்
களால் பூமியில் படுக்கை செய்யலாம், அந்த காட்டில், அல்
பர்களாயும் அவிவேகிகளாயும் பண வியாதியினால் நிலை
மாறியவர்களுமான, பணக்காரர்களுடைய பெயர்கூட,
நமது காதில் விழாது.

फलं स्वेच्छालभ्यं प्रतिवनमखेदं क्षितिरुहां
पयः स्थानेस्थाने शिशिरमधुरं पुण्यसरिताम् ।
मृदुस्पर्शा शय्या सुललितलतापल्लवमयी
सहन्ते संतापं तदपि धनिनां द्वारि कृपणाः ॥ २७ ॥

புலம் ஸ்வேச்சாலப்யம் ப்ரதிவநம் அகேதம் க்ஷிதிருஹாம்
பய: ஸ்தாநே ஸ்தாநே [illegible] புண்ய ஸரிதாம் |

ம்ருது ஸ்பரிசா சய்யா ஸுலலிதலதா பல்லவமயீ
ஸஹந்தே ஸந்தாபம் ததபி தனினும் த்வாரி க்ருபணா:॥

ப்ரதிவநம் - ஒவ்வொருக் காட்டிலும், க்ஷிதிருஹாம் - மரங்களுடைய, பலம் - பலமானது, ஸ்வேச்சாலப்யம் - நம்மிஷ்டப்படி கிடைக்கும், ஸ்தானே, ஸ்தானே - ஒவ்வொரு இடத்திலும், புண்ய ஸரிதாம் - புண்யநதிகளுடைய, சிசிர மதுரம் - குளிர்ந்த ருசியுள்ளதான, பய : - ஜலமும் கிடைக்கும், ஸுலலிதலதா - மனோகரமான கொடியினுடைய, பல்லவமயீ - துளிரால் செய்யப்பட்டதும், ம்ருது ஸ்பரிசா - மிருதுவாயிருப்பதுமான, சய்யா-படுக்கை உண்டு. ததபி - அவ்வளவிருந்தும், க்ருபணா: - ஏழைகள், தனினாம் - பணக்காரர்களுடைய, த்வாரி - வீட்டுவாசலில், ஸந்தாபம் - கஷ்டத்தை ஸஹந்தே - பொறுக்கிறார்களே.

காட்டில் உள்ள மரங்களில் இஷ்டப்படி பலங்கள் கிடைக்கின்றன. புண்யநதியினுடைய குளிர்ந்த ஜலமும் ஆங்காங்கு கிடைக்கிறது. லதாபல்லவங்களால் செய்யப்பட்ட மிருதுவான படுக்கையும் அங்கு உண்டு. காட்டில் அவ்வளவு ஸௌகரியம் இருக்கும்போதும் ஏழைகள் பணக்காரர் வாசலில் போய் நின்று கஷ்டங்களை ஏன் ஸஹிக்க வேண்டுமோ தெரியவில்லை.

ये वर्तन्ते धनपतिपुरः प्रार्थनादुःखभाजो
ये चाल्पत्वं दधति विषयाक्षेपपर्यासबुद्धेः ।
तेषामन्तः स्फुरितहसितं वासराणि स्मरेयं
ध्यानच्छेदे शिखरिकुहरग्रावशय्यानिषण्णः ॥ २८ ॥

யே வர்த்தந்தே தனபதி புர: ப்ரார்த்தனா துக்கபாஜ:
யேசால்ப்பத்வம் தததி விஷயாக்ஷேப பர்யாப்த புத்தே:
தேஷாமந்த: ஸ்புரித ஹஸிதம் வாஸராணி ஸ்மரேயம்
த்யானச்சேதே சிகரிகுஹர க்ராவசய்யா நிஷண்ண: ॥

தனபதி - பணக்காரனுடைய, புரப்ரார்த்தனா - எதி
ரில் போய் பிரார்த்திக்கிற துக்கத்தை, பாஜ: - அடைந்தவர்
களாக, யே வர்தந்தே - எவர்கள் இருக்கிறார்களோ, யேச -
எவர்களும், விஷயாக்ஷேப - ஸுகங்களை அனுபவிப்பதில்,
பர்யாப்த - ஒழிவடையக்கூடிய, புத்தே: - நல்ல புத்திக்கு,
அல்பத்வம் - நீசத்தன்மையை, தததி - செய்கிறார்களோ,
தேஷாம் - அந்த மனிதர்களுடைய, வாஸராணி - வாழ்நாள்
களை, த்யானச்சேதே - தியானம் முடிந்த சமயத்தில், சிகரி-
மலையினுடைய, குஹரா - குஹையிலுள்ள, சய்யா - படுக்
கையில், நிஷண்ண: - உட்கார்ந்துகொண்டு, அந்த: - உள்ளே,
ஸ்புரித - உண்டான, ஹஸிதம் - சிரிப்புடன், ஸ்மரேயம் -
நினைப்பேன்.

ஒரு யோகி கூறுகிறான், எந்த மனிதர்கள் பணக்காரர்
எதிரில் நின்று பிரார்த்தனை செய்கிறார்களோ, எவர்கள்
விஷய ஸுகங்களிலிருந்து ஒழிவடையும் புத்தியை நீசமாக
நினைக்கிறார்களோ, அத்தகைய மனிதர்களுடைய வாழ்நாளை
நான் யோகம் விட்ட ஸமயத்தில் மலை குஹையிலுள்ள படுக்
கையில் உட்கார்ந்துகொண்டபடியே, உள் சிரிப்புடன் நினைத்
துப்பார்ப்பதுண்டு.

ये संतोषनिरन्तरप्रमुदितास्तेषां न भिन्ना मुदो
ये त्वन्ये धनलुब्धसंकुलधियस्तेषां न तृष्णा हता ।
इत्थं कस्य कृतेः कृतः स विधिना कीदृक्पदं संपदां
स्वात्मन्येव समाप्तहेममहिमा मेरुर्न मे रोचते ॥ २९ ॥

யே ஸந்தோஷ நிரந்தரப்ரமுதிதா:
தேஷாம் ந பின்னாமுத:
யேத்வந்யே தனலுப்த ஸங்கு
லதிய: தேஷாம் ந த்ருஷ்ணா ஹதா ।
இத்தம், கஸ்ய க்ருதே
க்ருத: ஸ விதினா கித்ருக்
பதம் ஸம்பதாம் ஸ்வாத்மன்யேவ ஸமாப்த
ஹேம மஹிமா, மேருர் ந மே ரோசதே ll

யே - எவர்கள், ஸந்தோஷ - ஸந்தோஷத்தினால், நிரந்தர - இடைவிடாமல், ப்ரமுதிதா :- திருப்தியடைந் திருக்கிறார்களோ, தேஷாம் - அவர்களுடைய, முத: - ஸந்தோஷங்களும், ந பின்னா :- குறையவில்லை. யே அந்யே - வேறு எவர்கள், தன - தனத்தில், லுப்த - ஆசையையுள்ளதும், ஸங்குல - குழப்பமடைந்ததுமான, திய: - புத்தியை யுடையவர்களோ, தேஷாம் - அவர்களுடைய, த்ருஷ்ணா - ஆசையும், நஹதா - குறையவில்லை, இத்தம் - இம்மாதிரி, விதினா - தெய்வத்தினால், ஸம்பதாம் - ஸம்பத்துக்களுக்கு, தாத்ருக்பதம் - அவ்வளவு உயர்ந்த ஸ்தானமானது, கஸ்யக் ருதே - யாருக்காக, க்ருத: - செய்யப்பட்டதோ, ஸ்வாத்மந் யேவ - தன்னிடத்திலேயே, ஸமாப்த - முடிவடைந்த, ஹேம - தங்கத்தினுடைய, மஹிமா - கௌரவத்தையுடைய, மேரு: - மேருபர்வதமானது, மே - எனக்கு, நரோசதே - பிடிக்கவில்லை.

ஸம்பத்தானது எவர்கள் ஸ்வல்ப திரவியத்துடனேயே திருப்தியடைந்து ஸந்தோஷத்துடன் வாழ்கிறார்களோ, அவர்களை மாற்றமுடியவில்லை. எவர்கள் பண ஆசையினால் மேல்மேலும் பணம் சேகரிக்க நினைக்கிறார்களோ அவர்களுடைய ஆசையையும் போக்கமுடியவில்லை. இவ்வாறு இருதரப்பினர்களுடைய போக்கையும் மாற்றமுடியாத ஸம்பத்துக்கு இவ்வளவு மஹிமை தெய்வம் கொடுத்தது என் ? மேருமலையின் தங்கத்தின் மஹிமையானது மேருமலையோடு சக்தியற்று நிற்பதால் அது எனக்கு பிடிக்கவில்லை.

भिक्षाहारमदैन्यमप्रतिसुखं भीतिच्छिदं सर्वतो
दुर्मात्सर्यमदाभिमानमथनं दुःखौघविध्वंसनम् ।
सर्वत्रान्वहमप्रयत्नसुलभं साधुप्रियं पावनं
शंभोः सत्रमवार्यमक्षयनिधिं शंसन्ति योगीश्वराः ॥ ३० ॥

பிக்ஷாஹாரம் அதைந்யம் அப்ரதி
ஸுகம் பீதிச்சிதம் ஸர்வத:
துர்மாத்ஸர்ய மதாபிமான மதனம்
துக்கௌக வித்வம்ஸகம் |
ஸர்வத்ராந் வஹம் அப்ரயத்ன ஸுலபம்
ஸாதுப்ரியம் பாவகம்
சம்போ:ஸத்ரம் அவார்யம் அக்ஷயநிதிம்
சம்ஸந்தி யோகீச்வரா: ||

பிக்ஷாஹாரம் பிக்ஷையினால்கிடைக்கும் ஆஹாரமானது
- அதைந்யம் - தைன்யமற்றது; அப்ரதிஸுகம் - அதற்கு
ஸமமான ஸுகமற்றது. பீதிச்சிதம்- பயத்தை போக்குவது,
ஸர்வத: - எங்கும், துர்மாத்ஸர்ய-கெட்ட அஸூயையென்ன,
மதக்கொழுப்பென்ன, அபிமான-அஹம்பாவமென்ன, இவை
களை, மதனம் - நாசம் செய்வது, துக்கௌக - துக்க ஸமூ
கத்தை, வித்வம்ஸகம் - நாசம் செய்வது, ஸர்வத்ர - எங்
கும், அந்வஹம் - பிரதிதினமும், அப்ரயத்ந - சிரம
மின்றி ஸுலபம்-கிடைக்கக்கூடியது, ஸாது-ஸாதுகளுக்கு,
ப்ரியம் - இஷ்டமானதும், பாவகம் - பரிசுத்தமானது, சம்
போ: - சிவனுக்கு, ஸத்ரம் - திருப்திகரமாயும், அவார்யம் -
ஒருவராலும் தடுக்கமுடியாததும், அக்ஷயநிதிம் - குறை
வற்ற நிதியாகவும், யோகீச்வரா: - யோகீச்வரர்கள், சம்
ஸந்தி - (பிக்ஷாஹாரத்தை) ஸ்தோத்திரம் செய்கிறார்கள்.

பிறரிடம் யாசகம் வாங்கி ஜீவனம் செய்வதைவிட தானா
கக்கிடைக்கும் பிக்ஷாகாரமானது கௌரவமுள்ளதன்றும்,
பரமசிவனுக்கும் பிரியமானதென்றும் யோகீச்வரர்கள் புகழ்
கிறார்கள். அந்த பிக்ஷாஹாரத்தில் ஸ்வபாவ உயர்வுகளை கவி
ஒவ்வொரு பதத்தினாலும் விளக்குகிறார்.

भोगे रोगभयं कुले च्युतिभयं वित्ते नृपालाद्भयं
माने दैन्यभयं बले रिपुभयं रूपे जराया भयम् ।
शास्त्रे वादिभयं गुणे खलभयं काये कृतान्ताद्भयं
सर्वं वस्तु भयान्वितं भुवि नृणां वैराग्यमेवाभयम् ॥२१॥

போகே ரோகபயம் குலே
ச்யுதிபயம் வித்தே ந்ருபாலாத்பயம்
மானே தைந்ய பயம் பலே ரிபுபயம்
ரூபே ஜராயாபயம் |
ஶாஸ்த்ரே வாதிபயம் குணே கலபயம்
காயே க்ருதாந்தாத் பயம்
ஸர்வம் வஸ்து பயாந்விதம்
புவி ந்ருணாம் வைராக்யமேவாபயம் ||

போகே - விஷயலோக அனுபவத்தில், ரோகபயம்-ரோக
முண்டாகிற பயம் இருக்கிறது, குலே - நல்ல குலத்தில், ச்யு
திபயம் - நழுவிவிடுவோமென்பது பயம், வித்தே - பணமிருந்
தால், ந்ருபாலாத்பயம் - அரசனிடமிருந்து பயம், மானே-
கௌரவமிருந்தால், தைந்யபயம் - க்ருபணத்தன்மையிலிருந்து
பயம், பலே - சரீர பலமிருந்தால், ரிபுபயம் - சத்ருக்களிடமி
ருந்து பயம், ரூபே - அழகிருந்தால், ஜராயா: பயம் - கிழத்
தனத்திலிருந்து, பயம். ஶாஸ்த்ரே-சாஸ்திரப்படிப்பிருந்தால்
வாதிபயம் - எதிரிகளிடமிருந்து பயம், குணே - நல்லகுணமி
ருந்தால், கலபயம்-துஷ்டர்களிடமிருந்து பயம், காயே-சரீரத்
தில், க்ருதாந்தாத்பயம் - யமனிடமிருந்து பயம், புவி-பூலோ
கத்தில், ந்ருணாம் - மனிதர்களுக்கு, ஸர்வம் வஸ்து-எல்லா
வஸ்துவும், பயாந்விதம் - பயத்தோடு கூடினது, வைராக்ய
மேவ - வைராக்யமொன்று தான், அபயம் - பயமில்லாதது.

மனித வாழ்க்கையில் பயக்கலப்பில்லாமல்
ஒருவஸ்துவையும்ஸ்ருஷ்டிக்கவில்லை. பகவான்
போகலோகத்தில் ரோக
பயமிருக்கிறது. இதுபோல் குலம், பணம், கௌரவம்,
பலம், அழகு, படிப்பு, நற்குணம், சரீரம் ஆகிய ஒவ்வொன்
றிலும் ஒவ்வொருவிதமான பயம் இருப்பதை இந்த ச்லோ
கம் விவரித்துக்கூறுகிறது.

आक्रान्तं मरणेन जन्म जरसा चात्युज्वलं यौवनं
संतोषो धनलिप्सया शमसुखं प्रौढाङ्गनाविभ्रमैः ।
लोकैर्मत्सरिभिर्गुणा वनभुवो व्यालैर्नृपा दुर्जनै-
रस्थैर्येण विभूतयोऽप्युपहता ग्रस्तं न किं केन वा ॥२२॥

ஆக்ராந்தம் மரணேந ஜந்ம
ஜரஸா சாத்யுஜ்வலம் யௌவநம்
ஸந்தோஷ: தனலிப்ஸயா
ஶமஸுகம் ப்ரௌடாங்கநா விப்ரமை: |
லோகை: மத்ஸரிபி: குணா:
வநபுவ: வ்யாளை: ந்ருபா: துர்ஜநை:
அஸ்தைர்யேண விபூதயோபி
உபஹதா: க்ரஸ்தம் ந கிம் கேந வா ||

ஜந்ம - பிறப்பானது, மரணேந - சாவினால், ஆக்ராந்தம் - ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. அத்யுஜ்வலம் - ரொம்ப விளங்குகிற, யௌவநம் - யௌவநமானது, ஜரஸா - கிழத்தனத்தால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. ஸந்தோஷ: - ஸந்தோஷமானது, தனலிப்ஸயா - பண ஆசையால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. ஶமஸுகம் - பொறுமையினால் ஏற்படும் சுகமானது, ப்ரௌட - யுவதிகளான, அங்கநா - ஸ்திரீகளுடைய, விப்ரமை: - விலாசங்களாலும், குணா: - குணங்கள், மத்ஸரிபி: - அஸூயையைப்பிடித்த, லோகை: - ஜனங்களாலும், வநபுவ: - காட்டுபிரதேசங்கள், வியாளை: - ஸர்ப்பங்களாலும், ந்ருபா: - அரசர்கள், துர்ஜநை: - கெட்ட மனிதர்களாலும், விபூதய: - ஐச்வர்யங்கள், அஸ்தைர்யேண - ஸ்திரமில்லாமையாலும், உபஹதா: -தாக்கப்படுகின்றன, கிம் - எதுதான், கேநவா - எதினால்தான், ந க்ரஸ்தம் - விழுங்கப்படவில்லை.

கவி இந்த சதகத்தில் மனிதனுடைய இஹலோகபோகங்கள் தோஷமுள்ளவையென்றும் அஸ்திரங்களென்றும் விவரிக்கிறார். கீழ் ச்லோகத்தில் மனிதன் சுகமாக நினைக்கும் ஒவ்வொரு விஷயத்திலும் ஒவ்வொரு தோஷம் நிச்சயமாக இருப்பதை காட்டினார். அதையே சற்று இந்த ச்லோகத்திலும் விவரிக்கிறார். பிறவி யென்றால் மரண தோஷம்

சேர்ந்திருக்கிறது. நல்ல யௌவனத்தின் பிறகு கிழத்தனமும், ஸந்தோஷத்தில் பண ஆசையும் இந்திரியங்களின் அடக்கத்திற்கு ஸ்திரீகளின் விலாஸமும், குணங்களுக்கு அலையாளுக்களும், காட்டுக்கு துஷ்ட மிருகங்களும், அரசனுக்கு கெட்ட மனிதர்களும், ஐச்வர்யத்திற்கு ஸ்திரமில்லாமையும் ஆகிய தோஷங்கள் கேடுசெய்கின்றன. எந்த குணம் தான் தோஷத்தால் ஆக்ரமிக்கப்படவில்லை.

आधिव्याधिशतैर्जनस्य विविधैरारोग्यमुन्मूल्यते
लक्ष्मीर्यत्र पतन्ति तत्र विवृतद्वारा इव व्यापदः।
जातंजातमवश्यमाशु विवशं मृत्युः करोत्यात्मसा-
त्तत्किं तेन निरङ्कुशेन विधिना यन्निर्मितं सुस्थिरम् ॥३२

ஆதிவ்யாதி பதை: ஜநஸ்ய
விவிதை: ஆரோக்யம் உன்மூல்யதே
லக்ஷ்மீ: யத்ர பதந்தி தத்ர
விவ்ருத த்வாரா இவ வ்யாபத: |
ஜாதம் ஜாதம் அவச்யம் ஆசு விவசம்
மிருத்யு: கரோதி ஆத்மஸாத்
தத் கிம் தேந நிரங்குசேன விதிநா
யந்நிர்மிதம் ஸுஸ்திரம் ||

விவிதை:- பலவகையான, ஆதி-மனோவ்யாதி யென்ன, வ்யாதி - சரீர வ்யாதியென்ன, இவைகளுடைய பதை: - கூட்டத்தால், ஜனஸ்ய - மனிதனுடைய, ஆரோக்யம் - ஸௌக்கியமானது, உன்மூல்யதே - நாசமாக்கப்படுகிறது. யத்ர - எங்கு, லக்ஷ்மீ: - ஸம்பத்து இருக்கிறதோ, தத்ர - அங்கு, வ்யாபத: - ஆபத்துக்கள், விவ்ருதத்வாரா இவ - திறந்தவாசல் உள்ளதுபோல், பதந்தி - வருகின்றன. ஜாதம் ஜாதம் - பிறக்கப் பிறக்க, (மனிதனை) அவச்யம் -

நிச்சயமாயும், விவசம் ஸ்வாதீனம் இல்லாததாயும், மிருத்யு:- எமன், ஆத்மஸாத்கரோதி - தன்வசப்படுத்திக்கொள்ளுகி ருன். தத் - ஆகையினுலேயே, நிரங்குசேன - தடையற்ற- தேந - அந்த தெய்வத்தால், நிர்மிதம் - உண்டுபண்ணப் பட்டதில், ஸாஸ்திரம் - சாச்வதமாயிருப்பது, கிம் யத் - எது தான் இருக்கிறது ?

ஸ்வதந்த்ரமான அந்த தெய்வத்தால் உலகில் சாச்வத மாக எந்த வஸ்து தான் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறது? ஆரோக்யம் ஆதிவ்யாதிகளால் கெடுக்கப்பட்டிருக்கிறது. ஸம்பத்தோவென்ருல், அநேக ஆபத்துக்கள் நுழைவதற்கு இடமாயிருக்கிறது. ஆயுஸைப்பற்றியோ வென்ருல் பிறக் கப்பிறக்க மனிதனை எமன், தன் வசமாக்கிக்கொள்கிருன். ஆகையால், ஈசுவர ஸ்ருஷ்டியில் ஒன்றுமே சாச்வதமல்ல ॥

भोगास्तुङ्गतरङ्गभङ्गतरलाः प्राणाः क्षणध्वंसिनः
स्तोकान्येव दिनानि यौवनसुखस्फूर्तिः प्रियासु स्थिता ।
तत्संसारमसारमेव निखिलं बुद्ध्वा बुधा बोधका
लोकानुग्रहपेशलेन मनसा यत्नः समाधीयताम् ॥ ३४ ॥

போகா: துங்க தரங்க பங்கதரளா:
ப்ராணா: க்ஷணத்வம்ஸிந:
ஸ்தோகாந்யேவ திநாநி யௌவன
ஸுக ஸ்பூர்த்தி: ப்ரியாஸுஸ்திதா,
தத் ஸம்ஸாரம் அஸார மேவ
நிகிலம் புத்வா புதா போதகா:
லோகாநுக்ரஹ, பேசலேந மநஸா
யத்ந: ஸமாதீயதாம் ॥

போகா:— ஸுக அனுபவங்கள், துங்க - உயரமான, தரங்க - அலையினுடைய, பங்க - முறிவுபோல், தரளா:- ஸ்திரமற்றவை, ப்ராணா:- ப்ராணங்களோவென்ருல், க்ஷண-

க்ஷணேநோத்தில், த்வம்ஸிந :- நசிக்கக்கூடியவை. பிரியாஸு-ஸ்த்ரீகளிடம், யௌவந - யௌவந காலத்திய, ஸுக-ஸுகத்தினுடைய, ஸ்பூர்த்தி :- அனுபவமானது, ஸ்தோகான்யேவ - வெகு கொஞ்சமான, தினாநி - தினங்களுக்கே, ஸ்திதா - இருக்கக்கூடியது, தத் - ஆகையால், போதகா :- உபதேசிகளான, ஹே புதா:- ஏ விவேகிகளே, நிகிலம் - ஸமஸ்தமான, ஸம்ஸாரம் - ஸம்ஸாரத்தை, அஸாரமேவ - ஸாரமற்றதாகவே, புத்வா - அறிந்து, லோக:- லோகத்தினுடைய, அனுக்ரஹ - க்ஷேமத்தில், பேஶலேன - ஆசையுள்ள, மனஸா- மனதினுல், யத்ந:- காரியமானது, ஸமாதீயதாம் - செய்யப்படட்டும்.

சந்தன புஷ்பாதி வைளக்யங்கள் ஸமுத்ர அலைபோல் சஞ்சலங்கள். ப்ராணனேவென்றுல் க்ஷணத்தில் நசிக்கக்கூடியது. யௌவந காலத்திய ஸ்த்ரீஸுகானுபவம் சில காலங்களுக்கு மட்டுமே. ஆதலால் இந்த ஸம்ஸாரத்தில், யாவற்றம் அஸாரமென்பதை யறிந்து விவேகிகளாயும் உபதேசிகளாயும் உள்ள நீங்கள் லோக க்ஷேமார்த்தமாகப் பாடுபடுங்கள் ||

भोगा मेघवितानमध्यविलसत्सौदामिनीचञ्चला
आयुर्वायुविघट्टिताब्जपटलीलीनाम्बुवद्भङ्गुरम् ।
लोला यौवनलालसास्तनुभृतामित्याकलय्य द्रुतं
योगे धैर्यसमाधिसिद्धिसुलभे बुद्धिं विधध्वं बुधाः ॥३५॥

போகா : மேகவிதான மத்யவிலஸத்
ஸௌதாமினீ சஞ்சலா:
ஆயுர்வாயு விகட்டிதாப்ஜ படலீ லீனம்புவத் பங்குரம்
லோலா: யௌவந
லாலஸா: தனுப்ருதாம் இத்யா
கலய்ய த்ருதம் யோகே
தைர்ய, ஸமாதி ஸித்தி ஸுலபே
புத்திம் விதத்வம் புதா: ||

நருப்ருதாம் - மனிதர்களுடைய, போகா:- ஸௌக்யங்கள், மேகவிதான- மேகக்கூட்டத்தினுடைய, மத்யவிலஸத்- நடுவில் விளங்குகிற - ஸௌதாமினீ சஞ்சலா - மின்னல்போல் ஸ்திர மற்றது. ஆயு:- ஆயுஸ் ஸோவென்றால், வாயு- வாயுவினால், விகட்டித - மோதப்பட்ட, அப்ஜபடலீ - தாமரையிலையில், லீன - தங்குகிற, அம்புவத்- ஜலம்போல், பங்குரம் - ஸ்திரமற்றது. யௌவநலாலஸா :- யௌவந காலத்திய அபிலாஷைகளும், லோலா :- ஸ்திரமற்றவை, இதி - என்று, ஆகலய்ய-அறிந்து, ஹே புதா :- ஏ விவேகிகளே, தைர்ய - தைர்யமென்ன, ஸமாதி - மன உறுதியென்ன, இவைகளால், ஸுலபே - ஸாதிக்கக்கூடியதான, யோகே- ப்ரும்மத்யானத்தில், புத்திம்- மனதை, . விதத்வம் செலுத்துங்கள்.

முன் ஸ்லோகத்தில் சொன்னதையே கவி வேறு மாதிரியில் கூறுகிறார். மனிதர்களுடைய ஸுகானுபவங்கள் மேகங்கள் நடுவிலுள்ள மின்னல்போல் க்ஷணத்தில் மறையக் கூடியவை. ஆயுஸ்ஸும் - காற்றால் மோதப்பட்ட தாமரை இலையிலுள்ள ஜலத்திவலை போல் ஸ்திரமற்றது. யௌவன காலத்திய அபிலாஷைகளும் சாச்வதமல்ல. விவேகிகளே இதை நீங்கள் நன்றாக அறிந்து யோக மென்கிற ப்ரும்மத்யானத்தில் புத்தியைச் செலுத்துங்கள்.

आयुः कल्लोललोलं कतिपयदिवसस्थायिनी यौवनश्री-
र्थाः संकल्पकल्पा घनसमयतडिद्विभ्रमा भोगपूगाः ।
कण्ठाश्लेषोपगूढं तदपि च न चिरं यत्प्रियाभिः प्रणीतं
ब्रह्मण्यासक्तचित्ता भवत भवभयाम्भोधिपारं तरीतुम् ॥

ஆயு: கல்லோலலோலம் கதிபய
திவஸஸ்தாயினீ, யௌவநஸ்ரீ:

அர்த்தா: ஸங்கல்பகல்பா: கனஸமய
தடித்விப்ரமாபோக பூகா: |
கண்டாஸ்லேஷோபகூடம் ததபிச
ந சிரம் யத் ப்ரியாபி: ப்ரணீதம்,
ப்ரம்முண்யாஸக்த சித்தா: பவத பவ பயாம்
போதி பாரம் தரீதும் ||

ஆயு:- ஆயுஸ்ஸானது, கல்லோலலோலம் - அலைபோல் அசைவுள்ளது, யௌவந ஸ்ரீ:- யௌவந மென்கிற ஸம்பத்தானது, கதி பயதிவஸ:-சில தினங்கள் மட்டுமே, ஸ்தாயிநீ- இருக்கக்கூடியது. அர்த்தா:- பணங்கள், ஸங்கல்பகல்பா:- ஆசைமாத்திரமாகவே இருப்பவை. போகபூகா :- ஸௌக்ய பரம்பரைகள், கனஸமய - மழைகாலத்திய, தடித்- மின்னல் போல், விப்ரமா :- ஸ்புரிப்பவை, ப்ரியாபி:- ஸ்திரீகளால், ப்ரணீதம் - செய்யப்பட்ட, யத் - யாதொரு, கண்டாஸ்லேஷோபகூடம் -, ஆலிங்கனமோ, ததபி - அதுவும், ந சிரம் - நீடிக்கக்கூடியதல்ல. தத் - ஆகையால், பவபய - ஸம்ஸார பயமாகிற, அம்போதி - ஸமுத்திரத்தினுடைய, பாரம் - கரையை, தரீதும் - தாண்டுவதற்காக - ப்ரும்மணி - பரப்பிரம்மத்தினிடத்தில், ஆஸக்த - வைக்கப்பட்ட, சித்தா:- மனதையுடைவர்களாக, பவத - ஆருங்கள்.

ஆயுளானது அலைபோல் சஞ்சலம். யௌவநஸம்பத்தும் சிலகாலம் வரையிலே நிற்கும். தனதான்யாதி திரவியங்கள் வெறும் ஆசை மாத்திரங்களே. இஷ்டப்படி கிடைக்கக் கூடியவையல்ல. ஸ்திரீகளுடைய ஆலிங்கனாதி ஸுகங்களும் ஸ்திரமற்றவை. ஆதலால் ஸம்ஸார பயமாகிறஸமுத்திரத்தை தாண்ட எல்லோரும் பரப்பிரும்மத்தினிடத்தில் மனதைச் செலுத்துங்கள் ||

कृच्छ्रेणामेध्यमध्ये नियमिततनुभिः स्थीयते गर्भवासे
कान्ताविश्लेषदुःखव्यतिकरविषमो यौवने चोपभोगः ।
वामाक्षीणामवज्ञाविहसितवसतिर्वृद्धभावोऽप्यसाधुः
संसारे रे मनुष्या वदत यदि सुखं स्वल्पमप्यस्ति किंचित् ॥

க்ருச்ரேண அமேத்யமத்யே
நியமிததனுபி: ஸ்தீயதே கார்ப்பவாஸே
காந்தாவிச்லேஷ துக்க வ்யதிகர
விஷம: யௌவனேசோபபோக: ।
வாமாக்ஷீணாம் அவக்ஞாவிஹஸித
வஸதி: வ்ருத்த பாவோபி அஸாது:
ஸம்ஸாரே ரே மனுஷ்யா: வதத
யதிஸுகம் ஸ்வல்பமப்யஸ்தி கிம்சித் ॥

கர்ப்பவாஸே - கர்ப்பத்தில் வஸிக்கும்போது, அமேத்ய மத்யே - அசுத்தங்கள் மத்தியில், நியமித தனுபி: - கட்டுண்ட சரீரத்துடன், ஸ்தீயதே - இருக்கப்படுகிறது. ததா - அப்படி, யௌவனே - யௌவன காலத்தில், உபபோக: - அனுபவமானது, காந்தா - ஸ்திரீயினுடைய, விச்லேஷ - பிரிவினால் ஏற்பட்ட, துக்க - துக்கத்தினுடைய, வ்யதிகர - ஸம்பந்தத்தால், விஷம: - ஸௌக்கியமற்றது. வாமாக்ஷீணாம் - ஸ்திரீகளுடைய, அவக்ஞா - பரிகாஸம் கலந்த, விஹஸித - சிரிப்புக்கு, வஸதி: - இருப்பிடமான, வ்ருத்த பாவோபி - கிழத்தன்மையும், அஸாது: - கெட்டது. ரே மனுஷ்யா: - ஹே மனிதர்களே, ஸம்ஸாரே - ஸம்ஸாரத்தில், ஸ்வல்பமபி - மிகவும் கொஞ்சமான, கிம்சித் - துச்சமான, ஸுகம் - ஸுகமானது, அஸ்தி யதி - இருக்குமானால், வதத - சொல்லுங்கள்.

கர்ப்பவாஸ காலத்தில் சரீரமானது கட்டப்பட்டு மல மூத்ராதிகளின் மத்தியில் இருக்க நேருகிறது. யௌவன

ஸௌகமோவென்றால் பார்யா வியோகமென்கிற துக்க கலப் பால் கெட்டதாயிருக்கிறது. யௌவந ஸ்திரீகளின் பரிகால சிரிப்புக்கு இடமான கிழத்தன்மையும் நல்லதல்ல. ஆதலால் மனிதர்களே! இந்த ஸம்ஸாரத்தில் ஸ்வல்பமான ஸௌக மாவது இருக்கிறதாமென்பதைச் சொல்லுங்கள்!

व्याघ्रीव तिष्ठति जरा परितर्जयन्ती
रोगाश्च शत्रव इव प्रहरन्ति देहम् ।
आयुः परिस्रवति भिन्नघटादिवाम्भो
लोकस्तथाप्यहितमाचरतीति चित्रम् ॥ ३८ ॥

வ்யாக்ரீவ திஷ்டதி ஜரா பரிதர்ஜயந்தீ
ரோகாஸ்ச ஶத்ரவ இவ ப்ரஹரந்தி தேஹம்।
ஆயு: பரிஸ்ரவதி பின்னகடாத் இவாம்ப:
லோக: ததாபி அஹிதமாசரதீதி சித்ரம் ॥

ஜரா - கிழத்தனமானது, வ்யாக்ரீவ - புலி போல், பரி தர்ஜயந்தி - பயமுறுத்துகிறதாக, திஷ்டதி - காத்துக்கொண் டிருக்கிறது. ரோகாஸ்ச - வியாதிகளும், ஶத்ரவ இவ - சத் ருக்கள் போல், தேஹம் - சரீரத்தை, ப்ரஹரந்தி - தாக்கு கின்றன. பின்னகடாத் - உடைந்த குடத்திலிருந்து; அம்ப இவ - ஜலம் போல், ஆயு: - ஆயுளானது, பரிஸ்ரவதி - ஒழுகி ஓடுகிறது. ததாபி - அப்படியிருந்தும், லோக: - மனித ஸமூகமானது, அஹிதம் - தீங்கை, ஆசரதி இதி - செய்கிறதென்பது, சித்ரம் - ஆச்சரியமாயிருக்கிறது.

கவி கீழ் ஸ்லோகத்தில் சொல்லியதையே இங்கும் சுருக்கமாக சுட்டிக்காட்டுகிறார். மனித வாழ்க்கையில் கிழத் தனமென்கிற புலியானது மனிதனை ஆக்ரமிக்க பயமுறுத்திக் கொண்டேயிருக்கிறது. வியாதிகளோவென்றால் சத்ருக் களைப்போல் சரீரத்தை தாக்கியவண்ண மிருக்கின்றன.

உடைந்த குடத்திலிருந்து ஜலம் ஒழிகி ஓடுவதுபோல் ஆயுளும் போய்க்கொண்டேயிருக்கிறது. இவ்வளவு ஆபத்துக்களிடையிலும் மனித ஸமூகமானது பிறருக்கு தீங்கு செய்கிறதென்றால் இதைவிட அதிசயம் என்ன இருக்கிறது? அல்லது, தன் நல் வாழ்க்கைக்கே தீங்கு விளைவித்துக் கொள்கிறானென்றால் வேறு ஆச்சரியமென்ன இருக்கிறது?

भोगा भङ्गुरवृत्तयो बहुविधास्तैरेव चायं भव-
स्तत्कस्येह कृते परिभ्रमत रे लोकाः कृतं चेष्टितैः ।
आशापाशशतोपशान्तिविशदं चेतः समाधीयतां
कामोत्पत्तिवशात्स्वधामनि यदि श्रद्धेयमस्मद्वचः ॥३९॥

போகா: பங்குர வ்ருத்தய: பஹுவிதா:
தைரேவச அயம் பவ: தத்கஸ்ய
இஹ க்ருதே பரிப்ரமத ரே லோகா:
க்ருதம் சேஷ்டிதை: ।
ஆசாபாச ஶதோபசாந்தி விசதம்
சேதஸ்ஸமாதீயதாம் கமோத்
பத்திவஶாத்ஸ்வ தாமநி யதி
ஶ்ரத்தேயம் அஸ்மத்வச: ॥

போகா: - விஷய ஸுகங்கள், பஹுவிதா: - அநேகவித முள்ளவை. பங்குர வ்ருத்தய: - எல்லாம் நசிக்கும் ஸ்வபாவமாயினும், தைரேவ - அந்த ஸுகங்களாலேயே, அயம் பவ: - இந்த ஸம்ஸாரமானது ஏற்பட்டிருக்கிறது. தத் - ஆதலால், ரே லோகா: - ஹே மனிதர்களே, இஹ - இந்த ஸம்ஸாரத்தில், கஸ்ய க்ருதே - எந்த கார்யத்திற்காக, பரிப்ரமத - உழலுகிறீர்கள். சேஷ்டிதை: - உங்களுடைய கார்யங்களால், க்ருதம் - போதும். அஸ்மத்வச: - என்னுடைய வார்த்தையானது, ஶ்ரத்தேயம் யதி - விச்வஸிக்கத்

தகுந்ததாயிருந்தால், ஆஶாபாஶஶத - கணக்கற்ற ஆசை களுடைய, உபஶாந்தி - ஒழிவினால், விசதம் - தெளிவுள்ள தாக, சேத: - மனதை, காமோத்பத்திவஶாத் - ஆவ்லதை உண்டுபண்ணிக்கொள்ளும் வழியால், ஸ்வதாமநி - தனது அந்தராத்மாவில், ஸமாதீயதாம் - நிலைநிறுத்திக்கொள்ளவும்.

விஷய ஸுகங்கள் அநேக விதமாயிருந்தாலும் எல்லாம் நசித்துப் போகக்கூடியவைகளே. அந்த விஷயஸுகங்களி லேயே இந்த ஸம்ஸாரம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மனிதர்களே! எந்த ஸௌகரியத்திற்காக இந்த ஸம்ஸாரத்தில் சுத்துகிறீர்கள். போதும், உங்களுடைய உபயோகமற்ற காரி யங்கள். என்னுடைய வார்த்தையில் நம்பிக்கை இருக்கு மானால் பூர்ணமான ஆவலையுடன் மனதை கெட்ட ஆசை களிலிருந்து ஒழிவடைந்து நிர்மலமாக்கி ஸ்திரப்படுத்திக் கொள்ளுங்கள்.

ब्रह्मेन्द्रादिमरुद्गणांस्तृणकणान्यत्र स्थितो मन्यते
यत्स्वादाद्विरसा भवन्ति विभवास्त्रैलोक्यराज्यादयः ।
भोगः कोऽपि स एक एष परमो नित्योदितो जृम्भते
भो साधो क्षणभङ्गुरे तदितरे भोगे रतिं मा कृथाः ॥४०॥

ப்ரம்மேந்த்ராதி மருத்கணான் த்ருண
கணான் யத்ரஸ்தித: மந்யதே
யத்ஸ்வாதாத் விரஸாபவந்தி விபவா:
த்ரைலோக்ய ராஜ்யாதய: ।
போக: கோபி ஸ ஏக ஏஷ பரம:
நித்யோதித: ஜ்ரும்பதே
போ ஸாதோ க்ஷணபங்குரே
ததிதரே போகே ரதிம் மாக்ருதா: ॥

யத்ர - எந்தப்ப்ரும்மானந்தத்தில், ஸ்தித: - இருப்பவ
னும், ப்ரும்மா - ப்ரும்மாவென்ன, இந்த்ராதி - இந்திரன்
முதலானவர்களென்ன, மருத்கணான் - தேவதைகளை, த்ருண
கணான் - புல் குவியலாக, மந்யதே-நினைப்பனோ, யத்ஸ்வா
தாத் - எந்த ப்ரும்மானந்தத்தினுடைய அனுபவத்தினால்,
த்ரைலோக்ய - மூன்று லோகமென்ன, ராஜ்யம் முதலானவை
யென்ன, இவைகள், விரஸா: - ஸாரமற்றவைகளாக, பவந்தி-
ஆகின்றனவோ, ஸ ஏஷ: - அந்த, ஏக: - ஒன்றான, கோபி -
வர்ணிக்கமுடியாததான, போக: - ப்ரும்மானந்த அனுபவ
மானது, பரம: - உயர்ந்ததாயும், நித்யோதித: - நித்ய
க்ஷேமத்தோடு கூடினதாக, ஜ்ரும்பதே - உயர்ந்து ப்ரகாசிக்
கிறது. தத் - ஆகையால், போ! ஸாதோ - ஏ ஸாதுவே,
க்ஷணபங்குரே - க்ஷணத்தில் நசிக்கக்கூடிய, இதரே -
வேறான, போகே - ஸுகானுபவத்தில், ரதிம் - ருசியை,
மா க்ருதா: - செய்யாதே.

ப்ரும்மானந்த அனுபவமென்கிற உயர்ந்த ஸுகமொன்று
தான் நித்யமான ச்ரேயஸ்ஸுடன் விளங்குகிறது. அதில்
ஈடுபட்டவன் ப்ரும்மாதி தேவர்களையும் புல்லுக்கு ஸமமாக
நினைப்பான். அந்த ரஸத்தை அனுபவிப்பவனுக்கு மூன்று
லோக ராஜ்யாதிகளும் விரஸமாகத்தோன்றும். ஆகையால்,
ஏ! ஸாதுஜனங்களே, அந்த ப்ரும்மானந்த ரஸத்தைவிட்டு வேறு
நச்வரமான ஸுகானுபவத்தில் ஆசையை வைக்காதீர்கள்.

सा रम्या नगरी महान्स नृपतिः सामन्तचक्रं च त-
त्पार्श्वे तस्य च सा विदग्धपरिषत्ताश्चन्द्रबिम्बाननाः ।
उद्वृत्तः स च राजपुत्रनिवहस्ते बन्दिनस्ताः कथाः
सर्वं यस्य वशादगात्स्मृतिपथं कालाय तस्मै नमः ॥ ४१

ஸாரம்யா நகரீ மஹான் ஸ ந்ருபதி:
ஸாமந்த சக்ரஞ்ச தத் பார்ஶ்வே
தஸ்யச ஸா விதக்த பரிஷத் தா:
சந்த்ர பிம்பானனா: |

உத்வ்ருத்த: ஸச ராஜபுத்ர நிவஹ:
தே வந்தின: தா: கதா: ஸர்வம்
யஸ்ய வஶாத் அகாத் ஸ்ம்ருதி
பதம் காலாய தஸ்மை நம: ||

ரம்ய - அழகான, ஸா நகரீ - அந்தப்பட்டிணமென்ன, மஹான் - பெரியவனன, ஸ ந்ருபதி: - அரசனென்ன, தத் - அந்த, ஸாமந்த சக்ரஞ்ச - சிற்றரசர்கள் கூட்டமென்ன, தஸ்ய - அந்த அரசனுடைய, பார்ஶ்வே - பக்கத்தில் இருந்த, ஸா - அந்த, விதக்த பரிஷத் - வித்வத் கூட்டமென்ன, சந்த்ர பிம்பானனா: - சந்திரன்போன்ற முகத்தையுடைய, தா: - அந்த ராஜஸ்திரீகளென்ன, உத்வ்ருத்த: - அடங்காத, ஸ: - அந்த, ராஜபுத்ர நிவஹ: - ராஜகுமாரக் கூட்டமென்ன, தே வந்தின: - அந்த பாடகர்களென்ன தா: கதா: - அந்தப்பேச்சுக்களென்ன, ஸர்வம் - மேற் கண்ட யாவத்தும், யஸ்ய - எந்தக்காலத்தினுடைய, வஶாத் - சக்தியினால், ஸ்ம்ருதி பதம் - நினைத்துபார்க்கும்படியான நிலைமையை, அகாத் - அடைந்துவிட்டதோ, தஸ்மை - அப்படிப்பட்ட, காலாய - காலத்தின் பொருட்டு, நம: - நமஸ்காரம்.

கவி இந்த சதகத்தில் காலத்தின் மஹிமையையும் அதனால் வாழ்க்கையில் ஏற்படும் மாறுதல்களையும் வர்ணிக்கிறார். ஒரு காலத்தில் மஹோன்னத தசையில் இருந்த அரசனொருவன் காலப்போக்கால் தாழ்ந்த நிலைமையை அடையக் கூடுமென்று இந்த ச்லோகத்தில் காட்டுகிறார். அழகான பட்டணமும் அரசனுடைய மஹிமையும், சிற்றரசர்கள் அரசனுக்கு மரியாதை செய்வதும் அரசனைச்சுற்றிய வித்வத் கூட்டமும், அழகிய ராஜஸ்திரீகளும், கர்வம் கொண்ட ராஜகுமாரர்களும் அரசனை ஸ்தோத்திரம் செய்யும் பாடகர்களும், ஆக எல்லாம் நசித்துப்போய் இப்போது அவைகள் மனதினால் மாத்திரம் நினைத்துப் பார்க்கக்கூடிய நிலைமை ஏற்பட்டது காலத்தின் மஹிமையால் அல்லவா.

यत्रानेकः क्वचिदपि गृहे तत्र तिष्ठत्यथैको
यत्राप्येकस्तदनु बहवस्तत्र नैकोऽपि चान्ते ।
इत्थं नेयौ रजनिदिवसौ लोलयन्द्वाविवाक्षौ
कालः कल्यो भुवनफलके क्रीडति प्राणिशारैः ॥ ४२ ॥

யத்ரானேக: க்வசிதபி க்ருஹே தத்ர திஷ்டதி அதைக:
யத்ராப்யேக: ததநுபஹவ: தத்ர நைகோபி சாந்தே ।
இத்தம் நேயௌ: ரஜநி திவஸௌ லோலயந் த்வாவிவ அக்ஷௌ
கால: கல்ய: புவனபலகே க்ரீடதி ப்ராணிஶாரை: ॥

யத்ர - எந்த, க்வசிதபி - ஏதோ ஒரு, க்ருஹே - வீட்டில், அனேக: - அநேகம்பேர்களோ, தத்ர - அங்கு, ஏக: - ஒருவனே, திஷ்டதி - இருக்கிறான். யத்ராபி - எந்த இடத்தில், ஏக: - ஒருவன் மட்டுமோ, தத்ர - அங்கு, ததனு - பிறகு, பஹவ:- அனேகம்பேர்கள் (இருக்கிறார்கள்.) அந்தே - கடைசியிலோவென்றால், தத்ர - அங்கு, நைகோபி - ஒருவனும் இல்லை. இத்தம் - இம்மாதிரி, கல்ய: - சாமர்த்தியமுள்ள, கால: - காலமானது, ரஜநி திவஸௌ - இரவு பகல்களாகிற, த்வௌ அக்ஷௌ - இரண்டு ஆட்டக்காய்களை, லோலயந் - ஆட்டிக்கொண்டு, நேயை: - இஷ்டப்படி கொண்டுபோகக்கூடிய, ப்ராணிஶாரை: - பிராணிகளாகிற சொக்கட்டான் ஆட்டத்தால், க்ரீடதி - விளையாடுகிறது.

காலபலத்தால் ஏற்படும் மாறுதல்களை கவி சூதாட்டமாக சித்தரிக்கிறார். சாமர்த்தியம் நிறைந்த காலமென்கிற சூதாட்டக்காரன் இரவு பகலென்கிற இரண்டு ஆட்டக்காய்களை ஆட்டிக்கொண்டு பிராணிவர்க்கமாகிற சொக்கட்டான் பலகையில் விளையாடுகிறான். அதன் காரணமாக எந்த கிருஹத்தில் அநேகர் இருந்தார்களோ அங்கு பிறகு ஒருவனே இருக்கிறான். எந்த ஒருவன் மட்டுமோ அங்கு [illegible] காலபலத்தால்

பலர் காணப்படுகிறார். கடைசியில் அங்கு ஒருவருமே இருப்பதில்லை. இவ்வாறாக காலமாறுதல் காணப்படுவதை கவி இங்கு குறிப்பிட்டிருக்கிறார்.

आदित्यस्य गतागतैरहरहः संक्षीयते जीवितं
व्यापारैर्बहुकार्यभारगुरुभिः कालोऽपि न ज्ञायते ।
दृष्ट्वा जन्मजराविपत्तिमरणं त्रासश्च नोत्पद्यते
पीत्वा मोहमयीं प्रमादमदिरामुन्मत्तभूतं जगत् ॥ ४३ ॥

ஆதித்யஸ்ய கதாகதை: அஹ
ரஹ: ஸம்க்ஷீயதே ஜீவிதம்
வ்யாபாரை: பஹு கார்ய பார
குருபி: காலோபி ந க்ஞாயதே ।
த்ருஷ்ட்வா ஜன்ம ஜரா விபத்தி
மரணம் த்ராஸஸ்ச நோத்பத்யதே
பீத்வா மோஹ மயீம் ப்ரமாத
மதிராம் உன்மத்த பூதம் ஜகத் ॥

ஆதித்யஸ்ய-ஸூரியனுடைய, கதாகதை: - அஸ்தமன உதயங்களால், அஹரஹ: - ஒவ்வொரு நாளும், ஜீவிதம் - ஆயுள்ஸானது, ஸம்க்ஷீயதே - குறைகிறது. பஹு - அதிகமான, கார்யபார-கார்யச் சுமையினால், குருபி:- பெரிதான, வ்யாபாரை:- கார்யங்களால், காலோபி - மரணகாலமும், ந க்ஞாயதே - அறிந்து கொள்ளப்படவில்லை. ஜன்ம - பிறப்பென்ன, ஜரா - கிழத்தனமென்ன, விபத்தி - ஆபத்தென்ன, மரணம் - மரணமென்ன இவைகளை, த்ருஷ்ட்வா - பார்த்தும், த்ராஸ: -பயமும், நோத்பத்யதே - உண்டாகவில்லை. மோஹ மயீம் - மயக்கமுள்ளதான, ப்ரமாத மதிராம் - கவனக்குறைவென்கிற மதுவை, பீத்வா - குடித்து, ஜகத் - உலகமானது, உன்மத்த பூதம் - பைத்தியம்போல் இருக்கிறது.

ஒவ்வொரு தினமும் ஸூர்யனுடைய உதயாஸ்தமனங்
களால் மனிதனுடைய ஆயுஸ்ஸு குறைகிறது. ஸம்ஸார
வியாபாரத்தால் மரணகாலம் கூட அறிந்துகொள்ளப் பட
வில்லை. ஜனன மரணம் கிழத்தனம் முதலிய ஆபத்துக்களைப்
பார்த்தும் பயமுண்டாகவில்லை. சித்தமோஹமென்கிற மது
வைக் குடித்து இவ்வுலகமானது பைத்தியம் பிடித்ததுபோல்
இருக்கிறது.

रात्रिः सैव पुनः स एव दिवसो मत्वा मुधा जन्तवो
धावन्त्युद्यमिनस्तथैव निभृतप्रारब्धतत्तत्क्रियाः ।
व्यापारैः पुनरुक्तभूतविषयैरित्थं विधेनामुना
संसारेण कदर्थिता वयमहो मोहान्न लज्जामहे ॥ ४४ ॥

ராத்ரிஸ்ஸைவ புனஸ்ஸஏவ
திவஸோ மத்வா முதா ஜந்தவோ
தாவந்தி உத்யமிந: ததைவ
நிப்ருத ப்ராரப்த தத்தத் க்ரியா: 1
வ்யாபாரை: புனருக்த பூத விஷயை:
இத்தம் விதேநாமுனா ஸம்ஸா
ரேண கதர்த்திதா: வயமஹோ
மோஹாந்நலஜ்ஜாமஹே ll

ராத்ரி: - ராத்திரியானது, ஸைவ - அதுவே, திவஸ: -
பகலும், புன: - மறுபடியும், ஸ ஏவ - அதுவே, மத்வா -
அறிந்திருந்தும், ஜந்தவ: - ப்ராணிகள், முதா - வீணாக,
ததைவ - முன்போலவே, நிப்ருத - ரஹஸ்யமாக, ப்ரா
ரப்த - ஆரம்பிக்கப்பட்ட, தத்தத் க்ரியா: - அந்தந்த கார்யங்
களை உடையவர்களாக, உத்யமிந: - முயற்சி கொண்டவர்
களாக, தாவந்தி - ஓடி அலைகிறார்கள். புனருக்த பூத விஷ
யை: - திருப்பித் திருப்பி செய்யப்பட்ட, வ்யாபாரை: -

கார்யங்களால், இத்தம் விதேந - இம்மாதிரியான, ஸம்ஸாரேண - ஸம்ஸாரத்தால், கதர்த்திதா: - கஷ்டப்படுத்தப்பட்டநாம், மோஹாத் - மோஹத்தினால், ந லஜ்ஜாமஹே - வெட்கப்படவில்லை.

கவி முன் ச்லோகத்தில் சொல்லியதையே வேறு முறையில் இதில் சொல்லுகிறார். இரவும் பகலும் அதே மாதிரியில் வந்துபோய்க்கொண்டிருந்தும் ஜந்துப்பிராணிகள் அதை அறியாமல் தாங்களும் தங்கள் முயற்சிகளை வீணாக செய்து கொண்டு போகிறார்கள். அம்மாதிரி ஆகார நித்ரா விஷயஸுகாதிகளில் திரும்பத்திரும்ப நம்மை இழுத்து விடும் இந்த ஸம்ஸாரத்தில் நாம் கஷ்டப்படுத்தப்பட்டும் கூட மோஹத்தினால் அதிற்கு லஜ்ஜைப்படவில்லை.

न ध्यातं पदमीश्वरस्य विधिवत्संसारविच्छित्तये
स्वर्गद्वारकवाटपाटनपटु धर्मोऽपि नोपार्जितः ।
नारीपीनपयोधरोरुयुगलं स्वप्नेऽपि नालिङ्गितं
मातुः केवलमेव यौवनवनच्छेदे कुठारा वयम् ॥ ४५ ॥

ந த்யாதம் பதம் ஈச்வரஸ்ய
விதிவத் ஸம்ஸார விச்சித்தயே
ஸ்வர்க்கத்வார கவாட பாடன
படு: தர்மோபி நோபார்ஜித: ।
நாரீ பீன பயோதரோரு யுக
ளம் ஸ்வப்னேபி நாலிங்கிதம்
மாது: கேவலமேவ யௌவந
வனச்சேதே குடாரா வயம் ॥

ஸம்ஸார விச்சித்தயே - ஸம்ஸாரம் நசிப்பதற்காக, ஈச்வரஸ்ய - பகவானுடைய, பதம் - திருவடியானது, ந த்யாதம் - தியானிக்கப்படவில்லை. ஸ்வர்க்கத்வார கவாட

வாசலின், கவாட - கதவின், பாடன - பிளப்பதின், படு: - ஸாமர்த்தியமுள்ள, தர்மோபி - தர்மமும், நோபார்ஜித: - ஸம்பாதிக்கப்படவில்லை. நாரீ - ஸ்திரீகளுடைய, பீன பயோதரோரு யுகளம் - பெருத்த மார்புகள், ஸ்வப்னேபி - கனவிலும், நாலிங்கிதம் - ஆலிங்கனம் செய்யப்படவில்லை. மாது: - தாயாருடைய, யௌவந வன - யௌவனமென்கிற காட்டின், சேதே - அழிவில், வயம் - நாம், குடாரா: கேவலம் - கோடாலி போன்றவர்களே.

ஸம்ஸார வெறுப்பு அடைந்தவன் ஒருவன் நினைப்ப தாவது, நமது ஜன்மத்தில் ஒரு நன்மையும் அடைந்தோ மில்லை. ஸம்ஸார தாபம் நீங்க பகவானுடைய சரணத்தை த்யானமும் செய்யவில்லை. ஸ்வர்காதி லோகங்களை கொடுக்க வல்லதான தர்மத்தையும் ஸம்பாதிக்கவில்லை. கேவல விஷய லோகமான ஸ்திரீ ஆலிங்கனாதிகளும் கனவிலும் அனுபவிக் கப்படவில்லை. ஆதலால் நமது ஜன்மம் வீணானதே. நமது பிறப்பினால் தாயாருடைய யௌவன வெளக்யம் கெடுவதற்கு கோடாலிபோல் ஆனது தான் மிச்சம்.

नाभ्यस्ता प्रतिवादिवृन्ददमनी विद्या विनीतोचिता
खड्गाग्रैः करिकुम्भपीठदलनैर्नाकं न नीतं यशः ।
कान्ताकोमलपल्लवाधररसः पीतो न चन्द्रोदये
तारुण्यं गतमेव निष्फलमहो शून्यालये दीपवत् ॥ ४६ ॥

நாப்யஸ்தா ப்ரதிவாதி ப்ருந்த
தமனீ வித்யா வினீதோசிதா
கட்காக்ரை: கரிகும்ப பீட
தளனை: நாகம் நனீதம் யஶ: ।
காந்தாகோமல பல்லவாதர
ரஸ: பீதோ ந சந்த்ரோதயே
தாருண்யம் கதமேவ நிஷ்பல
மஹோ ஶுன்யாலயே தீபவத் ॥

ப்ரதிவாதி ப்ருந்த - எதிரிக் கூட்டங்களை, தமீ -
தோற்கடிக்கக்கூடியதும், வினீதோசிதா - வணக்கமுள்ளவர்
களுக்கு ஏற்றதாயும் உள்ள, வித்யா - வித்யையானது
நாப்யஸ்தா - அப்யஸிக்கப்படவில்லை. கரிகும்ப பீட - யானை
யின்சிரஸ்ஸை, தளனை: - பிளக்கக்கூடிய, கட்காக்ரை: -
கத்தி முனைகளால், யஶ: - கீர்த்தியானது, நாகம் - ஸ்வர்க்க
லோகத்தை, ஙனீதம் - கொண்டுபோகப்படவில்லை. காந்தா -
பார்யையினுடைய, கோமல பல்லவாதர - அழகிய துளிர்
போன்ற உதட்டினுடைய, ரஸ: - ருசியானது, சந்த்ரோ
தயே - சந்த்ரோதய காலத்தில், ந பீத: - அநுபவிக்கப்பட
வில்லை. தாருண்யம் - யௌவனமானது, ஶூன்யாலயே -
ஶூன்யமான வீட்டில் உள்ள, தீபவத் - விளக்குபோல், நிஷ்
பலம் - ப்ரயோஜனமற்றதாக, கதமேவ - போய்விட்டது.

அஹோ - கஷ்டம் !

ப்ரதிவாதிகளை ஜயிக்கக்கூடியதும் வினயமுள்ளவர்
களுக்கு ஏற்றதான வித்தையும் அப்யஸிக்கப்படவில்லை. யுத்
தத்தில் சத்ரு யானைகளின் சிரஸ்ஸை பிளக்கக்கூடிய கத்தி
முனைகளால் ஸம்பாதித்த கீர்த்தியும் ஸ்வர்க்கத்தை எட்ட
வில்லை. சந்த்ரோதய காலத்தில் ஸ்திரீகளுடைய அதர பல்
லவ ரஸமும் அநுபவிக்கப்படவில்லை. ஶூன்யமான க்ரஹத்
தில் ஏற்றிய விளக்குபோல் யௌவன வயதானது ப்ரயோ
ஜனமற்றதாக போய்விட்டது.

विद्या नाधिगता कलङ्करहिता वित्तं च नोपार्जितं
शुश्रूषापि समाहितेन मनसा पित्रोर्न संपादिता ।
आलोलायतलोचनाः प्रियतमाः स्वप्नेऽपि नालिङ्गिताः
कालोऽयं परपिण्डलोलुपतया काकैरिव प्रेर्यते ॥ ४६ ॥

வித்யா நாதிகதா களங்கரஹிதா
வித்தஞ்ச நோபார்ஜிதம்
சுச்ரூஷாபி ஸமாஹிதேநமநஸா
பித்ரோ: நஸம்பாதிதா ।
ஆலோலாயத லோசனா: ப்ரியதமா:
ஸ்வப்நேபி நாலிங்கிதா:
காலோயம் பரபிண்ட லோலுபதயா
காகைரிவ ப்ரேர்யதே ॥

களங்க ரஹிதா - கல்மஷமற்ற, வித்யா - வித்யையும், நாதிகதா - ஸம்பாதிக்கப்படவில்லை. வித்தஞ்ச - பணமும், நோபார்ஜிதம் - ஸம்பாதிக்கப்படவில்லை. ஸமாஹிதேந - ஊன்றியதான, மநஸா - மனதினால், பித்ரோ: - தாய் தகப்பனார்களுக்கு, சுச்ரூஷாபி - பணிவிடையும், ந ஸம்பாதிதா - செய்யப்படவில்லை. ஆலோலாயத லோசனா: - நீண்டு அசைந்த கண்களை உடைய, ப்ரியதமா: - ஸ்திரீகள், ஸ்வப்னேபி - ஸ்வப்னத்திலும், நாலிங்கிதா: - ஆலிங்கனம் செய்து கொள்ளப்படவில்லை. காலோயம் - இந்த ஜீவனகாலமானது, காகைரிவ - காக்கைகளைப்போல், பரபிண்ட லோலுபதயா - பிறருடைய சோற்றில் ஆசை கொண்டபடியே, ப்ரேர்யதே - தள்ளப்படுகிறது.

தோஷமற்ற வித்தையும் அப்யஸிக்கப்படவில்லை. பணமும் ஸம்பாதிக்கப்படவில்லை. மாதா பிதாக்களுக்கு செய்ய வேண்டிய சுச்ரூஷைகளும் செய்யப்படவில்லை. ஸ்திரீ ஸுகமும் ஸ்வப்னத்திலும் கிட்டவில்லை. ஆகவே இந்த வாழ்க்கையானது காக்கைகளைப்போல் பிறருடையசோற்றுக்கு ஆசைப் பட்டுக்கொண்டே கழிக்கப்படுகிறது.

वयं येभ्यो जाताश्चिरपरिचिता एव खलु ते
समं यैः संवृद्धाः स्मृतिविषयतां तेऽपि गमिताः ।

इदानीमेते स्मः प्रतिदिवसमासन्नपतना
गतास्तुल्यावस्थां सिकतिलनदीतीरतरुभिः ॥ ४८ ॥

வயம் எப்யோ ஜாதா: சிர
பரிசிதா எவ கலுதே
ஸமம்யை: ஸம்வ்ருத்தா: ஸ்மிருதி
விஷயதாம் தேபிகமிதா: ।
இதானீம் எதேஸ்ம: ப்ரதி
திவஸம் ஆஸன்ன பதனா:
கதாஸ்துல்யாவஸ்தாம்
ஸிகதில நதீ தீர தருபி: ॥

வயம்-நாம், எப்ய:-எவர்களிடமிருந்து, ஜாதா: - உண்டானோமோ, தே கலு- அவ்வவர்கள், சிரபரிசிதாயேவ-வெகு காலம் முன்பு பரிசயமுள்ளவர்களே. யை:ஸமம்- எவர்களோடு கூட, ஸம்வ்ருத்தா: - வளர்ந்தோமோ, தேபி - அவர்களும், ஸ்மிருதி விஷயதாம் - ஞாபகப்படுத்திக் கொள்ளுந்தன்மையை, கமிதா: - அடைந்து விட்டார்கள். இதானீம் - இப்பொழுது, எதே - நாம், ப்ரதி திவஸம் - ஒவ்வொருநாளும், ஆஸந்ந பதநா: - ஸமீபித்த வீழ்ச்சியை உடையவர்களாக, ஸிகதில - மணல் முட்டுள்ளதான, நதீ தீர - நதீ தீரத்தில் இருக்கும், தருபி: - மரங்களோடு, துல்யாவஸ்தாம் - ஸமமான நிலைமையை, கதாஸ்ம: - அடைந்துவிட்டோம்.

கலி காலத்தின் ஸ்வபாவமாறுதலை சொல்லுகிறார். மனிதர்களாகிய நாம் எவர்களிடமிருந்து உண்டானோமோ அவர்கள் வெகுநாளுக்கு முன்னே பரிசயம் விட்டுப்போனவர்கள். எவர்களிடம் சேர்ந்து வளர்ந்தோமோ அவர்களும் காலஞ்சென்று விட்டார்கள். மேலும் இப்போது நாம் மணல் திட்டுநிறைந்த நதிக்கரையிலுள்ள மரங்களுக்கு ஸமமாக ஒவ்வொரு நாளும் வீழ்ச்சியை அடையக்கூடிய நிலையில் ஆகி இருக்கிறோம்.

आयुर्वर्षशतं नृणां परिमितं रात्रौ तदर्धं गतं
तस्यार्धस्य परस्य चार्धमपरं बालत्ववृद्धत्वयोः ।
शेषं व्याधिवियोगदुःखसहितं सेवादिभिर्नीयते
जीवे वारितरङ्गचञ्चलतरे सौख्यं कुतः प्राणिनाम् ॥ ४९

ஆயுர்வர்ஷ ஶதம் ந்ருணாம் பரி
மிதம் ராத்ரௌ ததர்த்தம் கதம்
தஸ்யார்த்தஸ்ய பரஸ்யச அர்த்த
மபரம் பாலத்வ வ்ருத்தத்வயோ: |
சேஷம் வ்யாதிவியோக துக்க
ஸஹிதம் ஸேவாதிபி: நீயதே
ஜீவே வாரிதரங்க சஞ்சல தரே
ஸௌக்யம் குத: ப்ராணிநாம் ||

ந்ருணாம் - மனிதர்களுக்கு, ஆயு: - ஆயுஸ்ஸானது, வர்ஷஶதம் - நூறு வருஷமென்று; பரிமிதம் -கணக்கிடப்பட் டிருக்கிறது. ததர்த்தம் - அதில் பாதி, ராத்ரௌ - ராத்ரி காலத்தில், கதம் - போய்விட்டது. பரஸ்ய - முக்கியமான, தஸ்யார்த்தஸ்ய - அந்த பாதியினுடைய, அர்த்தம் - பாதியா னது, பாலத்வ வ்ருத்தத்வயோ: - பால்யம் கிழத்தனம் இவை களில், கதம் - போய்விட்டது. சேஷம் -மற்றொரு பாதியா னது, வ்யாதி-வியாதியென்ன, வியோக: - பந்துக்களின் பிரி வென்ன, துக்கமென்ன இவைகளுடன் சேர்ந்து,ஸேவாதிபி: - அடிமைத்தனம் முதலானவைகளால், நீயதே - கழிக்கப்படு கிறது. ஜீவே - உயிரானது, வாரி - ஜலத்திலுள்ள தரங்க - அலை போல், சஞ்சலதரே - சஞ்சலமாயிருக்கும் போது ப்ராணிநாம்-பிராணிகளுக்கு, ஸௌக்யம்-ஸௌக்யமானது, குத: எது?

மனிதனுக்கு முதலிலிருந்து நூறு வயது தான் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது, அதில் ராத்திரி காலத்தில் பாதி போய் விடுகிறது. பாக்கியில், குழந்தைத்தனம் கிழத்தனம்

இவைகளில் கழிந்துவிடுகிறது. பாக்கியோவென்றால் வ்யாதி துக்கம் முதலியவைகளுடனும் அடிமைத் தொழில் செய்து ஜீவிப்பதிலும் போகிறது. அலை போல் அலைந்து கொண்டிருக்கும் இந்த ஆயுஸ்ஸில் ப்ராணிகளுக்கு ஸௌக்யமானது ஏது ?

क्षणं बालो भूत्वा क्षणमपि युवा कामरसिकः
क्षणं वित्तैर्हीनः क्षणमपि च संपूर्णविभवः ।
जराजीर्णैरङ्गैर्नट इव वलीमण्डिततनुः
नरः संसारान्ते विशति यमधानीयवनिकाम् ॥ ५० ॥

க்ஷணம் பாலோ பூத்வா க்ஷணமபி
யுவா காமரஸிக: க்ஷணம்
வித்தைர் ஹீந: க்ஷணமபி ச
ஸம்பூர்ண விபவ:
ஜரா ஜீர்ணை: அங்கை:
நட இவ வலீ மண்டித தநு:
நர: ஸம்ஸாராந்தே
விஶதி யமதாநீ யவநிகாம் ॥

க்ஷணம் - க்ஷண காலம், பாலோ பூத்வா - குழந்தையாயிருந்தும், க்ஷணமபி - வேறு சில காலம், காம ரஸிக: - மன்மத ரஸிகனை, யுவா -யுவாவாக இருக்கிறான், க்ஷணம் - சில காலம், வித்தைர் ஹீந:-பணமற்றவனுயிருக்கிறான், க்ஷணமபி ச - வேறு க்ஷண காலம், ஸம்பூர்ண விபவ: பூர்ணமான சொத்துள்ளவனுயிருக்கிறான். ஜரா ஜீர்ணை: - கிழத்தனத்தால், வாடிப்போன, அங்கை: - சரீரங்களோடு, வலீ மண்டித தநு: - சுருக்கங்களால் நிரம்பிய சரீரத்தையுடைய, நர:- மனிதன், நட இவ-பல வேஷம் பூணும் நடன் போல், ஸம்ஸாராந்தே ஸம்ஸாரத்தின் முடிவில் யமதாநீ யவநிகாம் - யம ராஜ்யமாகிற திரைக்குள், விஶதி - நுழைகிறான்.

மனிதன் சிலகாலம் பால்யத்தில் இருந்தும் பிறகு யௌவனமடைந்து காமரஸிகனாக வாழ்ந்தும் ஒரு காலம் பணக்காரனாகவும் ஒரு ஸமயம் ஏழையாக இருந்தும் க்ஷணத் திற்கு க்ஷணம் மாறி லோகதுக்கங்களை அடைந்து கடைசியில் கிழத்தனத்தால் உடம்பு சுருங்கி யமலோகம் போகிறான்.

त्वं राजा वयमप्युपासितगुरुप्रज्ञाभिमानोन्नताः
ख्यातस्त्वं विभवैर्यशांसि कवयो दिक्षु प्रतन्वन्ति नः ।
इत्थं मानधनातिदूरमुभयोरप्यावयोरन्तरं
यद्यस्मासु पराङ्मुखोऽसि वयमप्येकान्ततो निःस्पृहाः ॥५१

த்வம் ராஜா வயமபி உபாஸித
குருப்ரக்ஞாபி மாநோன்னதா:
க்யாத: த்வம் விபவை: யசாம்ஸி
கவய: திக்ஷு ப்ரதந்வந்தி ந: ।
இத்தம் மானதனாதி தூரம்
உபயோ: அப்யாவயோ: அந்தரம்
யத்யஸ்மாஸு பராங்முகோஸி
வயமபி ஏகாந்தத: நிஸ்ப்ருஹா: ॥

த்வம் - நீர், ராஜா - அரசன். வயமபி - நாமும், உபாஸித - ஸேவிக்கப்பட்ட, குரு - ஆசார்யாளிடமிருந்து கிடைத்த, ப்ரக்ஞா - உயர்ந்த ஞானத்தையுடைய, அபிமான - கௌரவத்தால், உந்நதா: - உயர்ந்தவர்களே. த்வம் - நீ, விபவை: - ஐச்வர்யங்களால், க்யாத: - ப்ரஸித்தியடைந்தவனாயிருக்கிறாய். ந: - எங்களுடைய, யசாம்ஸி - கீர்த்திகளை, கவய: வித்வான்கள், திக்ஷு - எல்லா திக்குகளிலும், ப்ரதந்வந்தி - பரப்புகிறார்கள். இத்தம் - இம்மாதிரி, ஆவயோ: உபயோ: - நம் இருவருக்கும், மான - கௌரவமென்ன, தன - பணமென்ன, இவைகளால், அதி தூரம் -

மிகுந்த தூரமுள்ள, அந்தரம் - இடவெளி இருக்கிறது. அஸ்மாஸு - எங்களிடத்தில், யதி பராங்முகோஸி - பரா முகமாயிருப்பாயானால், வயமபி - நாங்களும், ஏகாந்தத: - உறுதியாக, நிஸ்ப்ருஹா: - அபேக்ஷையற்றவர்களே.

கவி இந்த ஶ்லோகத்தில் அரசனுக்கும் ஸன்யாஸிக்கும் ஸம்பாஷணையை வர்ணிப்பதின் மூலம் வைராக்யத்தின் உயர்வை விவரிக்கிறார். ஒரு ஸன்யாஸி அரசனைப்பார்த்து சொல்லுவதாவது :—

ஏ அரசனே ! நீ அரசனென்கிற அபிமானம் கொண்டாயானால், சன்யாசியாகிற நாங்களும் ஆசார்ய உபாஸனத்தால் கிடைத்த உயர்ந்த ஞானத்தால் கௌரவம் பெற்று உயர்ந்திருக்கிறோம். நீ ஐச்வர்யங்களால் க்யாதி அடைந்திருக்கிறாய். ஸன்யாஸியாகிற எங்களுடைய க்யாதியையும் எல்லா திக்குகளிலும் வித்வான்கள் பரப்பி வருகிறார்கள். இவ்வாறு உன்னிடமுள்ள பணத்தாலும் எங்களுடைய கௌரவத்தாலும் நாம் இருவரும் மிகுந்த வித்தியாஸமுள்ளவர்களாயிருக்கிறோம். நீ எங்களிடம் பராமுகமாயிருந்தால் நாங்களும் உன்னிடம் எவ்வித அபேக்ஷையையும் அற்றிருப்போம்.

अर्थानामीशिषे त्वं वयमपि च गिरामीश्महे यावदर्थं
शूरस्त्वं वादिदर्पव्युपशमनविधावक्षयं पाटवं नः ।
सेवन्ते त्वां धनाढ्या मतिमलहतये मामपि श्रोतुकामा
मय्यप्यास्था न ते चेत्त्वयि मम नितरामेव राजन्ननास्था ॥

அர்த்தானாம் ஈஶிஷே த்வம் வய
மபிச கிரா மீஶ்மஹே யாவதர்த்தம்
ஶூரஸ்த்வம் வாதி தர்ப்ப வ்யுப
ஶமன விதாவக்ஷயம் பாடவம் ந: |

ஸேவந்தே த்வாம் தனாட்யா:மதி
மலஹ்ருதயே மாமபி ஸ்ரோதுகாமா
ஸமய்யப்யாஸ்தா நதேசேத் த்வயி
மம நிதராமேவ ராஜந் நாஸ்தா ||

ராஜந் - அரசனே, த்வம் - நீ, அர்த்தானாம் - பணங்களுக்கு, ஈஶிஷே - யஜமானனாயிருக்கிறாய். வயமபி - நாமும், யாவதர்த்தம் - அர்த்தம்வேண்டிய அளவுக்கு; கிராம்சாஸ்திர வசனங்களுக்கு; ஈஶ்மஹே - யஜமானர்களாயிருக்கிறோம். த்வம் - நீ, ஶூர: - சத்ருவை ஜயிப்பதில் ஸௌர்யமுள்ளவன். ந: - எங்களுக்கோவென்றால், வாதி - பிரதிவாதிகளுடைய, தர்ப்ப - கொழுப்பை, வ்யுபஶமனவிதௌ - அடக்கும் கார்யத்தில், அக்ஷயம் - குறைவற்ற, பாடவம் - ஸாமர்த்தியம் உண்டு. த்வாம் - உன்னை, தனாட்யா: - பணக்காரர்கள், ஸேவந்தே - அனுஸரிக்கிறார்கள். மாமபி - என்னையும், மதிமல ஹ்ருதயே - புத்தி அழுக்கு நீங்குவதற்காக, ஸேவந் ஸ்ரோதுகாமா: - தர்மம்கேழ்க்க ஆசையுள்ளவர்கள், ஸேவந்தே - ஆச்ரயிக்கிறார்கள். தே - உனக்கு, மய்யபி - என்னிடத்தில், ஆஸ்தா - அபிமானமானது, ந சேத் - இல்லையானால், த்வயி - உன்னிடத்தில், மம - எனக்கு, நிதராம் - அடியோடு, அநாஸ்தா - அபிமானம் கிடையாது.

இந்த ச்லோகத்தில் கவி முன் சொன்னதைப்போலவே வேறு ரீதியில் சொல்லுகிறார். அரசனாகிய நீ ஸம்பத்துக்கு அதிபதி என்று நினைக்கலாம். ஆனால் என்னைப்போன்ற சன்யாசிகள் சாஸ்திரப்படிப்பென்ற ஸம்பத்துக்கு அதிபதிகளாயிருக்கிறோம். சத்ருவை ஜயிப்பதில் உனக்கு ஶூரத்தனமுண்டு. நாங்களும் வாதத்தில் பிரதிவாதிகளுடைய கர்வத்தை அடக்கக்கூடிய ஸாமர்த்தியம் உள்ளவர்கள். பணக்காரர்கள் உன்னை அநுஸரிக்கிறார்களென்றால் தெளிவான சாஸ்திர ஞானம்பெற விருப்பமுள்ளவர்கள் பலர் எங்களை அண்டி வருகிறார்கள். ஆகவே எவ்வகையிலும் உன்னைவிட நாங்கள் தாழ்ந்தவர்களல்ல. எங்களிடம் நீ அபிமானம் கொள்ளவில்லையானால் நாங்களும் உன்னை அடியோடு உபேக்ஷிப்போம்.

वयमिह परितुष्टा वल्कलैस्त्वं दुकूलैः
सम इव परितोषो निर्विशेषो विशेषः ।
स तु भवतु दरिद्रो यस्य तृष्णा विशाला
मनसि च परितुष्टे कोऽर्थवान्को दरिद्रः ॥ ५३ ॥

வயமிஹ பரிதுஷ்டா: வல்கலை: த்வம் துகூலை:
ஸம இவ பரிதோஷ: நிர்விசேஷோ விசேஷ: ]
ஸது பவது தரித்ரோ யஸ்ய த்ருஷ்ணா விஸாலா
மனஸிச பரிதுஷ்டே கோர்த்தவாங் கோ தரித்ர: ॥

வயம் - நாங்கள், இஹ - இங்கு, வல்கலை: - மரை
யுருவி வஸ்திரங்களால், பரிதுஷ்டா: - திருப்தியடைந்துள்
ளோம். த்வம் - நீயோவென்றால், துகூலை: - வெண்பட்டு
களால் திருப்தியடைகிறாய். பரிதோஷ: - ஸந்தோஷமானது,
ஸம இவ - இருவருக்கும் ஸமமே. விசேஷ: - உயர்வானது,
நிர்விசேஷ: - தாரதம்யமற்றது. யஸ்ய - எவனுக்கு,
த்ருஷ்ணா - ஆசையானது, விஸாலா - விஸ்தாரமாயிருக்
கிறதோ. தரித்ர: - தரித்தரனாக, அவனே, பவது -
இருக்கட்டும். மனஸி - மனதானது, பரிதுஷ்டே - திருப்தி
அடைந்துவிட்டால், க: - எவன்தான், அர்த்தவாங் - பணக்
காரன்? க: - எவன்தான், தரித்ர: - தரித்திரன்?

ஏ அரசனே! சன்யாசியாகிற நாங்கள் மரையுருவியாகிற
வஸ்திரத்தை உடுத்தி திருப்தியடைந்திருக்கிறோம். நீயோ
வென்றால் வெண்பட்டு உடுத்தி திருப்தியடைகிறாய். நம்
இருவருக்கும் ஸந்தோஷம் ஸமமாகவே இருக்கிறது. உயர்வு
தாழ்வு என்கிற வித்தியாஸமில்லை. ஆதலால் எவனுக்கு மன
தில் ஆசையானது விசாலமாயிருக்கிறதோ அவனே தரித்
திரனுவான். மனதானது ஸந்தோஷமடைந்துவிட்டால்
பணக்காரன் யார், தரித்திரன் யார்? மனதை அடக்கி
னால் தரித்திரனும் பணக்காரனைப்போல் அமைதியாக ஸந்
தோஷத்துடன் வாழமுடியும்.

फलमलमशनाय स्वादु पानाय तोयं
क्षितिरपि शयनार्थं वाससे वल्कलं च ।
नवधनमधुपानभ्रान्तसर्वेन्द्रियाणा-
मविनयमनुमन्तुं नोत्सहे दुर्जनानाम् ॥ ५४ ॥

பலம் அலம் அஶநாய ஸ்வாது பாநாய தோயம்
க்ஷிதிரபி ஶயனார்த்தம் வாஸஸே வல்க்கலஞ்ச ।
நவதன மதுபான ப்ராந்த ஸர்வேந்த்ரியாணாம்
அவிநய மநுமந்தும் நோத்ஸஹே தூர்ஜநாநாம் ॥

அஶநாய - சாப்பிடுவதற்கு, பலம் - பழமானது, அலம் - போதும். பாநாய - குடிப்பதற்கு, ஸ்வாது - ருசியான, தோயம் - ஜலமானது, அலம் - போரும். ஶயனார்த்தம் - படுக்கைக்கு, க்ஷிதிரபி - பூமியும், வாஸஸே - வஸ்திரத்திற்காக, வல்க்கலஞ்ச - மரையுருவியும், அலம் - போரும். நவதன - புதுப்பணமாகிற, மதுபான - மதுவைக் குடித்ததால், ப்ராந்த மயக்கமடைந்த, ஸர்வேந்த்ரியாணாம் - எல்லா இந்திரியங்களையும் உடையவர்களான, தூர்ஜநாம் - துஷ்டர்களுடைய, அவிநயம் - அலக்ஷியத்தை, அநுமந்தும் - அங்கீகரிப்பதற்கு, நோத்ஸஹே - ஸஹித்துக் கொள்ளமாட்டேன்.

ஒரு சன்யாசி சொல்லுகிறான். புதுப்பணமென்கிற மதுவைக்குடித்து அதனால் மயக்கமடைந்த தூர்ஜனங்களுடைய அலக்ஷியத்தை ஸஹிப்பதைவிட ஆகாரத்திற்கு பழமே போரும். ருசியுள்ள ஜலமும், பூமியில் படுக்கையும், மரையுருவி வஸ்திரத்தையும், இத்யாதி தானாக கிடைக்கக் கூடிய வஸ்துக்களால் ஜீவிப்பேனேயல்லது மேற்கண்ட துர்ஜனர்களை அண்டி பிழைக்க ஸஹிக்கமாட்டேன்.

अशीमहि वयं भिक्षामाशावासो वसीमहि ।
शयीमहि महीपृष्ठे कुर्वीमहि किमीश्वरैः ॥ ५५ ॥

அஶீமஹி வயம் பிக்ஷாம் ஆஶாவாஸோ வஸீமஹி ।
ஶயீமஹி மஹீ ப்ருஷ்டே குர்வீமஹி கிமீஶ்வரை: ॥

வயம் - நாம், பிக்ஷாம் பிக்ஷையை, அஸ்மஹி - சாப்பிடுவோம். ஆஸாவாஸ: - திக்குக்களாகிய வஸ்திரத்தை, வஸீமஹி - உடுத்திக்கொள்ளுவோம். மஹீ ப்ருஷ்டே - பூமியின்மேல், ஶயீமஹி - படுத்துக்கொள்வோம். ஈச்வரை: - பணக்காரர்களால், கிம் - என்ன, குர்வீமஹி - செய்யப் போகிறோம்.

கவி கீழ் சொல்லியதையே மற்றொரு வழியில் சொல்லுகிறார். ஸன்யாஸிகளாகிற நாம் பிக்ஷான்னத்தை சாப்பிட்டு திகம்பரர்களாக பூமியில் படுத்து காலம் தள்ள நினைத்தால் பணக்காரர்களால் நமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை.

न नटा न विटा न गायका
न च सभ्येतरवादचुञ्चवः ।
नृपमीक्षितुमत्र के वयं
स्तनभारानमिता न योषितः ॥ ५६ ॥

ந நடா: ந விடா: ந காயகா: ந ச
ஸப்யேதர வாத சுஞ்சவ: ।
ந்ருபம் ஈக்ஷிதும் அத்ரகே வயம்
ஸ்தநபாரா நமிதா: நயோஷித: ॥

வயம் - நாம், ந நடா: - நடிகர்களல்ல. ந விடா: - ஸ்திரீகளைக் கெடுக்கும் விடர்களல்ல. ஸப்யேதர - அஸப்யமான, வாத - பேச்சினால், சுஞ்சவ: - ஸந்தோஷப்படுத்துகிறவர்களல்ல. ஸ்தநபார - ஸ்தந பாரத்தினால், ஆநமிதா: - வணங்கிய, யோஷித: - ஸ்திரீகளுமாக, ந - இல்லையாதலால், அத்ர - இங்கு. ந்ருபம் - அரசனை, ஈக்ஷிதும் - பார்ப்பதற்கு, கே வயம் - நான் யார் ?

அரசன் அலக்ஷியம் செய்து பேட்டியளிக்காததால் வருந்திய வைராக்யசாலி கூறுவதாவது:—

அரசன் நடன், விடன், காயகன், ஸபையில் ஜுகுப்ஸையாக பேசி சிரிப்பு உண்டுபண்ணி பிழைப்பவன், அழகிய ஸ்திரீகள் ஆகியவர்களுக்கே ஸந்தோஷத்துடன் பேட்டி கொடுப்

பான். மேற்கண்ட வகையில் ஒன்றிலும் நாம் சேராததால்
அரசன் பேட்டி நமக்கு கிடைக்காதது அதிசயமில்லை.

विपुलहृदयैरीशैरेतज्जगज्जनितं पुरा
विधृतमपरैर्दत्तं चान्यैर्विजित्य तृणं यथा ।
इह हि भुवनान्यन्ये धीराश्चतुर्दश भुञ्जते
कतिपयपुरस्वाम्ये पुंसां क एष मदज्वरः ॥ ५७ ॥

விபுல ஹ்ருதயை: ஈசைரேதத் ஜகத்ஜனிதம் புரா
விதிருதமபரை: தத்தம்சான்யை: விஜித்ய த்ருணம் யதா ।
இஹஹி புவநாந்யந்யே தீரா: சதுர்தஸ புஞ்ஜதே
கதிபய புரஸ்வாம்யே பும்ஸாம் க ஏஷ மதஜ்வர: ॥

விபுல ஹ்ருதயை: - விசால மனதுள்ள, ஈசை: - ஈச்வரர்களால், புரா - முன்பு, ஏதத் - இந்த, ஜகத் - உலகமானது ஜனிதம் - உண்டாக்கப்பட்டது. அபரை: - வேறு சிலரால், விதிருதம் - விசேஷமாக பரிபாலிக்கப்பட்டது. அன்யை: - வேறு சிலரால், விஜித்ய - ஜயித்து, த்ருணம் யதா - புல்லுபோல், தத்தம் - தானம் பண்ணப்பட்டது. இஹஹி - இப்போதும், அன்யே தீரா: - வேறு தீரர்களான அரசர்கள், சதுர்தஸ புவநாநி - பதினாலு உலகங்களையும், புஞ்ஜதே - அனுபவிக்கிறார்கள். (இப்படியிருக்க) கதிபய புர - வெகு கொஞ்சமான ராஜ்யத்திற்கு, ஸ்வாம்யே - யஜமானத்வம் இருப்பதில், பும்ஸாம் - இந்த மனிதர்களுக்கு, க: - ஏன்? ஏஷ: - இந்த, மதஜ்வர: - கர்வ ஜ்வரமானது,

முன் காலத்தில் விஸ்தார மனதுள்ள பெரியோர்கள் இந்த ஜெகத்தை ச்ருஷ்டித்துள்ளார்கள். வேறு சிலர் விசேஷமாக ராஜ்யத்தை ஆண்டு ரக்ஷித்தார்கள். இன்னும் சிலர் பூமியை ஜயித்து பிறருக்கு தானமும் செய்தார்கள். இப்போதும் சிலர் பதினான்கு லோகங்களையும் அநுபவிக்கிறார்கள். மேற்கண்ட கௌரவமுள்ள பெரியோர்கள் எவரும் அஹம்பாவம் அடையவில்லை. ஆனால் ஏதோ சில கொஞ்சமான ராஜ்யத்திற்கு அதிபதியாக இருக்கும் சிலர் மட்டும் ஏன் இவ்வளவு கர்வஜ்வரம் பிடித்தவர்களாக இருக்கிறார்கள்?

अभुक्तायां यस्यां क्षणमपि न जातं नृपशतै-
र्भुवस्तस्या लाभे क इव बहुमानः क्षितिभृताम् ।
तदंशस्याप्यंशे तदवयवलेशेऽपि पतयो
विषादे कर्तव्ये विधति जडाः प्रत्युत मुदम् ॥ ५८ ॥

அபுக்தாயாம் யஸ்யாம் க்ஷணமபி ந ஜாதம் ந்ருபஶதை:
புவ: தஸ்யா லாபே க இவ பஹுமாந: க்ஷிதிப்ருதாம் ।
ததம்ஶஸ்யாப்யம்ஶே ததவயவ லேஶே஽பி பதயோ
விஷாதே கர்த்தவ்யே விதததி ஜடா: ப்ரத்யுதமுதம் ॥

யஸ்யாம் - எந்த பூமியானது, ந்ருபஶதை: - அநேக அரசர்களால், அபுக்தாயாம் - அனுபவிக்கப்படாமல், க்ஷண மபி ந ஜாதம் - ஒரு க்ஷணம்கூட இருக்காதோ. தஸ்யா: - அந்த, புவ: - பூமியினுடைய, லாபே - லாபத்தில், க்ஷிதி ப்ருதாம் - அரசர்களுக்கு, க இவ - பஹுமாந: - என்ன கௌரவம் ? ததம்ஶஸ்ய - அந்த பூமியினுடைய ஏகதேசத் திலோ, அம்ஶே - அதினுடைய ஏகதேசத்திலோ, ததவயவ லேஶேऽபி - அந்த ஏகதேசத்தினுடையவும் (துளியில்) பதய: - அரசர்களாக இருந்துகொண்டு, ஜடா: - மூடர்கள், விஷாதே கர்த்தவ்யே - துக்கப்படவேண்டியிருக்கையில், ப்ரத்யுத - விபரீதமாக, முதம் - ஸந்தோஷத்தை, விதததி - அடை கிறார்கள்.

பூமியானது பிரதி க்ஷணமும் அநேக அரசர்களால் மாறிமாறி அனுபவிக்கப்படாமல் ஒரு க்ஷணம்கூட நிலைத் திருப்பதில்லை. அப்படிப்பட்ட அஸ்திரமான பூமி கிடைத் தால் அதில் எந்த அரசன்தான் கௌரவம் கொள்ள முடியும். மேலும் பூமியினுடைய ஏகதேசத்திற்கோ அல் லது அந்த ஏகதேசத்திலும் மிகக்குறைவான ஒரு பாகத் திற்கு அரசனுயிருப்பதில் வெட்கப்படவேண்டியதே யல்லது ஸந்தோஷப்படுகிறவர்கள் மூடர்களே.

मृत्पिण्डो जलरेखया वलयितः सर्वोऽप्ययं नन्वणुः
स्वांशीकृत्य तमेव संगरशतै राज्ञां गणा भुञ्जते ।
ते दद्युर्ददतोऽथवा किमपरं क्षुद्रा दरिद्रा भृशं
धिग्धिक्तान्पुरुषाधमान्धनकणान्वाञ्छन्ति तेभ्योऽपि ये ॥

மிருத்பிண்ட: ஜலரேகயா வல
யித: ஸர்வோப்யயம் நன்வணு:
ஸ்வாம்ஸீக்ருத்ய தமேவ ஸங்கர
ஶதை: ராக்ஞாம் கணா புஞ்ஜதே ।
தே தத்யு: தத தோதவா கிம
பரம் க்ஷுத்ரா தரித்ரா: ப்ருஶம் திக்
திக் தான் புருஷாதமான் தன
கணான் வாஞ்சந்தி தேப்யோபி யே ॥

ஜலரேகயா - ஸமுத்திர ஜலமாகிற ரேகையால், வல யித: - சூழப்பட்ட, மிருத்பிண்ட: - மண்ணுருண்டையாகிற பூமியானது, ஸர்வோபி - எல்லாமே, அணு: நநு - அல்ப மல்லவா? தமேவ - அதையே, ராக்ஞாம்கணா: - அரசர் களுடைய கூட்டமானது, ஸங்கர ஶதை: - அநேக யுத்தங் களால், ஸ்வாம்சிக்ருத்ய - தனக்கு ஸ்வாதீனமாக செய்து கொண்டு, புஞ்ஜதே - அனுபவிக்கிறார்கள். தே - அப்படிப் பட்ட அரசர்கள், தத்யுர்வா - பிறருக்கு தானம் செய்வார் களா? அதவா - அல்லது, ததத: - கொடுத்தாலும், அப ரம் கிம் - கஷ்டமானதென்ன? க்ஷுத்ரா: - அற்பர்களாயும், தரித்ரா: - தரித்திரர்களாயுமிருக்கிறார்கள். தேப்யோபி - அந்த தரித்திர அரசர்களிடமிருந்தும் தனகணான் - அல்ப திரவியங்களை, யே - எந்த புருஷர்கள், வாஞ்சந்தி - யாசகம் கேழ்க்க விரும்புகிறார்களோ, தான் - அந்த, புருஷாதமான் - இழிப்பட்ட மனிதர்களை, திக்திக் - நிந்திக்கவேணும்.

அரசர்களை உயர்வாக மதித்து அவர்களிடம் யாசகம் பெற விரும்புவோரை கவி இதில் நிந்திக்கிறார். ஸமுத்திரத்தால் சூழப்பட்ட இந்த பூமியானது ஜலத்தால் சூழ்ந்த ஒரு மண் உருண்டைக்கு ஸமானமாக இருக்கிறது. ஒரு அணுவுக்கு ஸமமான இந்த பூமியை அரசர்கள் அநேக யுத்தங்களால் தன் வசப்படுத்திக்கொண்டு அநுபவிக்கிறார்கள். இப்படி அல்பர்களாயும் தரித்திரர்களாயுமிருக்கிற அந்த அரசர்கள் பிறர்களுக்கு பணத்தை கொடுக்கத் துணிவார்களா? அப்படியிருக்க சில மனிதர்கள் அந்த அரசர்களிடமிருந்தும் ஸ்வல்ப திரவியங்களை யாசிக்க முன் வருகிறார்கள். இத்தகைய கீழ்த்தர மனிதர்களை நிந்திப்போமாக.

स जातः कोऽप्यासीन्मदनरिपुणा मूर्ध्नि धवलं
कपालं यस्योच्चैर्विनिहितमलंकारविधये।
नृभिः प्राणत्राणप्रवणमतिभिः कैश्चिदधुना
नमद्भिः कः पुंसामयमतुलदर्पज्वरभरः ॥ ६० ॥

ஸஜாத: கோப்யாஸீத் மதநரிபுணா மூர்த்நி தவளம்
கபாலம் யஸ்யோச்சை: விநிஹிதம் அலங்காரவிதயே ।
ந்ருபி: ப்ராணத்ராண ப்ரவண மதிபி: கைஸ்சித் அதுநா
நமத்பி: க:பும்ஸாம்: அயம் அதுல தர்ப்ப ஜ்வர பர: ॥

யஸ்ய - எந்த மனிதனுடைய, மூர்த்நி - சிரஸ்ஸில், மதநரிபுணா - பரமசிவனால், தவளம் - வெளுப்பான, கபாலம் - கபாலமானது, அலங்காரவிதயே - அலங்காரமாக, உச்சை: விநிஹிதம் - நன்றாக வைக்கப்பட்டதோ, ஸ: - அவனே, கோபி - அபூர்வ மனிதனாக, ஜாத: - உண்டானவனாக ஆகிறான். ப்ராணத்ராண - தனது பிராணனை ரக்ஷித்துக் கொள்வதில், ப்ரவணமதிபி: - புத்தி வைத்தவர்களான, கைஸ்சித் - சில, நமத்பி: - வணங்குகிற, ந்ருபி: - மனிதர்களால், பும்ஸாம் - இந்த அர்சர்களுக்கு ஏற்பட்டுள்ள, அயம் - இந்த, அதுல - நிகரற்ற, தர்ப்ப - கொழுப்பாகிற,

ஜ்வர - ஜ்வரத்தினுடைய, பர: - பளுவானது, க இவ - என் ?

எந்த மனிதனுடைய சிரஸ்ஸில் மன்மத சத்ருவான பரமேச்வரனால் பிக்ஷாகபாலமானது அலங்காரமாக வைக்கப் படுகிறதோ அவனே உயர்ந்து பிறந்த ஒரு மனிதன். இப்படி யிருக்க தன் உயிரை காத்துக்கொள்ள வேண்டி, யாசகம் கேட்க வரும் சில மனிதர்கள் தலை வணங்குவதை நினைத்து அஹம்பாவப்படும் அரசர்களுடைய கர்வமானது என்ன பயன்படும்.

परेषां चेतांसि प्रतिदिवसमाराध्य बहुधा
प्रसादं किं नेतुं विशसि हृदयक्लेशकलितम् ।
प्रसन्ने त्वय्यन्तः स्वयमुदितचिन्तामणिगणो
विविक्तः संकल्पः किमभिलषितं पुष्यति न ते ॥ ६१ ॥

பரேஷாம் சேதாம்ஸி ப்ரதிதிவஸ மாராத்ய பஹுதா ப்ர ஸாதம் கிம் நேதும் விஸஸி ஹ்ருதய க்லேஸசகலிதம் I
ப்ரஸன்னே த்வய்யந்த: ஸ்வய முதித சிந்தா மணிகண:
விவிக்த: ஸங்கல்ப: கிமபிலஷிதம் புஷ்யதி நதே II

ஹ்ருதய - ஏ மனமே, ப்ரதி திவஸம் - ஒவ்வொரு நாளும், பரேஷாம் - பிறருடைய, சேதாம்ஸி - மனதுகளை, பஹுதா - பல வகையாக, ஆராத்ய - திருப்திசெய்துவைத்து, க்லேஸ கலிதம் - கஷ்டத்துடன் கூடிய, ப்ரஸாதம் - ப்ரீதியை, நேதும் - அடைவிக்க, கிம் விஸஸி - ஏன் முயற்சிக்கிறாய். த்வயி - மனதாகிற நீ, ப்ரஸன்னே - தெளிவாயிருந்தால், அந்த: - உள்ளே, ஸ்வயம் - தானகவே, உதித - உண்டான, சிந்தா மணிகண: - ரத்னகுவியலையுடைய, விவிக்த: - ஏகாந்தமான, ஸங்கல்ப: - இச்சையானது தே - உன்னுடைய, அபிலஷிதம் - இஷ்டத்தை, ந புஷ்யதி கிம் - பூர்த்தி செய்யாதா என்ன ?

கவி இந்த தசகத்தில் மனதை ஸம்போதனம் செய்து (கூப்பிட்டு) வைராக்யாதி நியமங்களை உபதேசிக்கிருர்: ஏ மனதே நீ ப்ரதி தினமும் பல வகையில் பிறர் மனதை திருப்தி செய்துவைத்து அனுக்ரஹம் பெற விரும்புகிருய்? ஆனல் நீ தெளிவடைந்து அல்ப எண்ணங்களை விட்டால் உன்னுள்ளே தானகவே ரத்தினக் குவியல்கள் தோன்ருதா? அப்படிப்பட்ட ஏகாந்தமான ஸங்கல்பம் அல்லது இச்சையானது ஏன் உனது மனோரதத்தை பூர்த்தி செய்து வைக்காது?

परिभ्रमसि किं मुधा क्वचन चित्त विश्राम्यतां
स्वयं भवति यद्यथा भवति तत्तथा नान्यथा ।
अतीतमननुस्मरन्नपि च भाव्यसंकल्पय-
न्नतर्कितसमागमाननुभवामि भोगानहम् ॥ ६२ ॥

பரிப்ரமஸி கிம் முதா க்வசனசித்த விஸ்ராம்யதாம்
ஸ்வயம்பவதி யத்யதா பவதி தத்ததா நாந்யதா ।
அதீத மனனுஸ்மரந் அபிச பாவ்யஸங்கல்பயந் அதர்
கித ஸமாகமாநநு அனுபவாமி போகாநஹம் ॥

சித்த - ஏ மனமே, முதா - வீணக, கிம் - ஏன், பரிப்ரமஸி - சுற்றுகிருய். க்வசன - எங்கேயாவது, விஸ்ராம்யதாம் - ச்ரமபரிகாரம் செய்துகொள்ளவும், யத் - எந்த கார்யமானது, யதா - எப்படி, பவதி - உண்டாகுமோ, தத் - அதானது, ததா - அப்படியே, ஸ்வயம் - தானகவே, பவதி - உண்டாகிறது. நாந்யதா - வேறில்லை. அதீதம் - தாண்டிப்போனதை, அனனுஸ்மரந் - நினைக்காமலும், அபிச - மேலும், பாவி - வரப்போகிறதை, அஸங்கல்பயந் - இச்சைப்படாமலும், அதர்க்கித - எதிர்பாராத, ஸமாகமான் - வருகையை உடைய, போகான் - விஷய ஸுகங்களை, அஹம் - நான், அனுபவாமி - அனுபவிக்கிறேன்.

ஏ மனமே! ஏன் வீணாக சுற்றுகிறாய்? ஏதாவது ஓரிடத்தில் நிலைபெற்று ஓய்வாயாக. எந்த கார்யம் எப்படி வரவேணுமோ அப்படி தானாகவே வந்துதீரும். வேறில்லை. இந்த உண்மையை அறிந்த நான் தாண்டிப்போன ஆசைகளை நினைக்காமலும் வரப்போகிறவைகளை நினைத்து வருந்தாமலும் ஐஹிகஸுகங்களை அனுபவித்தும் இயற்கையாக வருகிற வருகிறேன்.

एतस्माद्विरमेन्द्रियार्थगहनादायासकादाश्रय
श्रेयोमार्गमशेषदुःखशमनव्यापारदक्षं क्षणात् ।
स्वात्मीभावमुपैहि संत्यज निजां कल्लोललोलां गतिं
मा भूयो भज भङ्गुरां भवरतिं चेतः प्रसीदाधुना ॥६३॥

ஏதஸ்மாத் விரமேந்த்ரியார்த்த
கஹநாத் ஆயாஸகாத் ஆஸ்ரய
ஸ்ரேயோமார்க்கம் அஸேஷ துக்க
ஸமந வ்யாபார தக்ஷம் க்ஷணாத் ।
ஸ்வாத்மீ பாவம் உபைஹி ஸந்த்யஜ
நிஜாம் கல்லோல லோலாம் கதிம்
மாபூய: பஜ பங்குராம் பவ ரதிம்
சேத: ப்ரஸீதாதுநா ॥

சேத: - ஏ மனமே, ஆயாஸகாத் - ச்ரமத்தைக்கொடுக்கக் கூடிய, ஏதஸ்மாத் - இந்த, இந்த்ரியார்த்த - இந்த்ரிய விஷய, கஹநாத் - கெட்ட வழியிலிருந்து, விரம - ஒழிவாயாக. க்ஷணாத் - க்ஷணத்திற்குள், அஸேஷ - ஸமஸ்தமான, துக்க - துக்கத்தினுடைய, ஸமநவ்யாபார - போக்கடிக்கும் காரியத்தில், தக்ஷம் - சாமர்த்தியம் உள்ள,

ஸ்ரேயோமார்க்கம் - க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய ஞான மார்க்கத்தை, ஆஸ்ரய - ஆச்ரயிக்கவும். ஸ்வாத்மீபாவம் - ஸ்வரூபதன்மையை, உபைஹி - அடையவும், கல்லோல - அலை போல், லோலம் - அசைவுற்றதான, நிஜாம் - உன்னுடைய, கதிம் - கார்யத்தை, ஸந்த்யஜ - விட்டுவிடவும். பூய: - மறுபடியும், பங்குராம் - நசிக்கக்கூடிய, பவாசதிம் - ஸம்ஸார ஆசையை, மாபஜ - அடையாதே. அதுநா - இப்பொழுது ப்ரஸீத - தெளிவு பெறுவாயாக.

ஏ மனமே இந்த்ரியங்களை த்ருப்திசெய்வதான இந்த கஷ்டமான வழியிலிருந்து விலகி ஸகல துக்கங்களையும் ஒரு க்ஷணத்தில் போக்கக்கூடிய ச்ரேயஸ்கரமான ஞானமார்க்கத்தை அடைந்து ஆத்மஸ்வரூப உண்மையைபெற்று மறுபடியும் அலைபோல் சஞ்சலமாயும் நச்வரமாயும் உள்ள இந்த ஸம்ஸார ஆசையை அடையாதே. தெளிவு பெறவும்.

मोहं मार्जय तामुपार्जय रतिं चान्द्रार्धचूडामणौ
चेतः स्वर्गतरंगिणीतटभुवामासङ्गमङ्गीकुरु ।
को वा वीचिषु बुद्बुदेषु च तडिल्लेखासु च श्रीषु च
ज्वालाग्रेषु च पन्नगेषु च सुहृद्वर्गेषु च प्रत्ययः ॥ ६॥

மோஹம் மார்ஜய தாம் உபார்ஜய
ரதிம் சந்த்ரார்த்த சூடாமணௌ
சேத: ஸ்வர்க்க தரங்கிணீ
தடபுவாம் ஆஸங்க மங்கீகுரு ।
கோ வா வீசிஷு புத்புதேஷு ச
தடில்லேகாஸு ச ஸ்ரீஷு ச
ஜ்வாலாக்ரேஷு ச பந்நகேஷு ச
ஸுஹ்ருத்வர்க்கேஷு ச ப்ரத்யய: ॥

சேத :- ஏ மனமே, மோஹம் - அக்ஞானத்தை, மார்ஜய - துடைத்துக்கொள். சந்திரார்த்த அர்த்த சந்திரனை, சூடாமணௌ - சிரஸ்ஸுக்கு அலங்காரமாகக் கொண்ட பகவானிடத்தில், தாம் - அந்த, ரதிம் - ப்ரீதியை, உபார்ஜய - ஏற்படுத்திக்கொள். ஸ்வர்க்கதரங்கிணி - கங்கையினுடைய, தடபுவாம் - கரைப்பிரதேசங்களில், ஆஸங்கம் - ஆஸ்தையை, அங்கீகுரு - ஏற்றுக்கொள். வீசிஷு - அலைகளிலும், புத்புதேஷு - நீர்குமிழிகளிலும், தடில்லேகாஸு - மின்னல் கொடிகளிலும், ஸ்ரீஷு - ஐச்வர்யங்களிலும், ஜ்வாலாக்ரேஷு - நெருப்பு நுனியிலும், பந்நகேஷு - பாம்புகளிலும் போன்ற, ஸுக்ருத் - ஸ்நேகிதனுடைய, வர்க்கேஷு - கூட்டங்களிலும், கோ வா ப்ரத்யய: - என் நம்பிக்கை உனக்கு.

ஏ மனமே புத்ரமித்ராதி மோஹத்தைவிட்டு சந்திரசேகரனாகிய பகவானிடத்தில் பக்தியை ஸம்பாதித்துக்கொள். தபஸ்ஸிற்காக வைராக்ய ஸாதனமான கங்கா தீரங்களில் வாஸம் செய். அலைபோலும் நீர்குமிழிபோலும் மின்னல் கொடிபோலும் உள்ள ஸம்பத்துக்களிலும் நெருப்புஜ்வாலை ஸர்ப்பம் இவைபோன்ற ஸ்நேகிதர்களிடத்திலும் உனக்கு ஏன் இவ்வளவு நம்பிக்கை.

चेतश्चिन्तय मा रमां सकृदिमामस्थायिनीमास्थया ।
भूपालभ्रुकुटीकुटीविहरणव्यापारपण्याङ्गनाम् ।
कन्थाकञ्चुकिनः प्रविश्य भवनद्वाराणि वाराणसी-
रथ्यापङ्क्तिषु पाणिपात्रपतितां भिक्षामपेक्षामहे ॥ ६५ ॥

சேத: சிந்தய மா ரமாம்
ஸக்ருதிமாம் அஸ்தாயினீம் ஆஸ்தயா.
பூபால ப்ருகுடீ குடீ
விஹரண வ்யாபார பண்யாங்கனாம் ।
கந்தா கஞ்சுகின: ப்ரவிச்ய
பவநத்வாராணி வாரணஸீ
ரத்யா பங்க்திஷு பாணி பாத்ர
பதிதாம் பிக்ஷாம் அபேக்ஷமஹே ॥

சேத: - ஏ ! மனதே, பூபால - அரசர்களுடைய, ப்ரு ப்ருகுடீ - நெற்றிப்புருவமாகிற, குடீ - வீட்டில், விஹரண - விளையாடுகிற, பண்யாங்கனாம் - விலைமாதர்போன்ற, இமாம் - இந்த - அஸ்தாயினீம் - ஸ்திரமற்றவளான ரமாம்-ராஜ்ய லக்ஷ்மியை - ஸக்ருத் - ஒருதடவைகூட ஆஸ்த்யா - ஆசையால், மா சிந்தய - நினைக்காதே. கந்தா சஞ்சுகின: - கிழிந்த சட்டைகள் அணிந்து, வாராணஸீரத்யா பங்க்திஷு - காசியின் வீதியிலுள்ள, பவநத்வாராணி - வீட்டுவாசல்படி களில் ப்ரவிச்ய - நுழைந்து, பாணி பாத்ர பதிதாம் - கையாகிற பிக்ஷா பாத்திரத்தில் தானாக விழுகிற, பிக்ஷாம் - பிக்ஷையையே - அபேக்ஷாமஹே - விரும்புகிறோம்.

ஏ ! மனமே - அரசர்களுடைய நெற்றிப் புருவமாகிற கட்டிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கிற இந்த ஸ்திரமற்ற ராஜ்யலக்ஷ்மியை மனதால் ஆசைப்பட்டு ஒரு தடவைகூட நினைக்காதே. காசி க்ஷேத்ர வீதியிலுள்ள வீட்டுவாசல்படி களில் கிழிந்த வஸ்திரத்துடன் நுழைந்து பிக்ஷையெடுத்து நமது ஹஸ்தமாகிற பிக்ஷாபாத்திரத்தில் தானாகவே வந்து விழும் பிக்ஷையையே நாம் விரும்புகிறோம்.

अग्रे गीतं सरसकवयः पार्श्वयोर्दाक्षिणात्याः
पश्चाल्लीलावलयरणितं चामरग्राहिणीनाम् ।
यद्यस्त्येवं कुरु भवरसास्वादने लम्पटत्वं
नो चेच्चेतः प्रविश सहसा निर्विकल्पे समाधौ ॥ ६६ ॥

அக்ரே கீதம் ஸரஸ கவய:
பார்ச்வயோ: தாக்ஷிணாத்யா:
பஶ்சாத் லீலா வலயரணிதம்
சாமரக்ராஹிணீநாம் ।
யத்ய ஸ்த்யேவம் குரு பவ
ரஸாஸ்வாதநே லம்படத்வம்
நோ சேத் சேத: ப்ரவிச ஸஹஸா
நிர் விகல்பே ஸமாதௌ ॥

19

சேத: - ஏ ! மனமே, அக்ரே - எதிரில், கீதம் - ஸங்
கீதமும், பார்ச்வயோ: - பக்கங்களில், தக்ஷிணாத்யா: - தென்
தேசத்திய, ஸரஸ கவய: - ரஸக்கலா நிபுணர்களான கவி
களும், பஸ்சாத் - பின்னால், சாமரக்ராஹிணீநாம் - சாமரம்
போடுகிற ஸ்திரீகளுடைய, லீலா வலயாணிதம் - கைவளை
களின் லீலா சப்தமும், யத்யஸ்தி - இருக்குமானால், பவாஸ -
ஸம்ஸாரஸ்தத்தின், ஆஸ்வாதநே - அனுபவத்தில், லம்ப
டத்வம் - ஆசையுள்ளவனாயிருப்பதை, குரு - செய்வாயாக.
நோ சேத்-இல்லையேல், நிர்விக்னமான, ஸமாதௌ - த்யானத்
தில், ஸஹஸா - சீக்ரமே, ப்ரவிச - பிரவேசிப்பாயாக

ஏ ! மனமே ! உனக்கு ஸம்ஸார அநுபவ ஆசை யிருந்
தால் அது உயர்ந்த நிலைமையில் கிடைக்குமானால் ஏற்று
அநுபவிப்பாயாக - நல்ல ஸங்கீதமும் சிறந்த ரஸிகர்களான
தென்தேசத்திய கவிகளும், சாமரம் போடுகிற ஸ்திரீகளின்
கைவளை சப்தமும், ஆகியவைபோன்ற உயர்ந்த அனுபவங்
கள் ஏற்பட்டால் ஸம்ஸார ரஸத்தில் ஆசை கொள். இல்லை
யேல் நிர்விகல்பக ஸமாதி என்ற பிரமத்யானத்தில் இறங்கு
வாயாக.

प्राप्ताः श्रियः सकलकामदुघास्ततः किं
न्यस्तं पदं शिरसि विद्विषतां ततः किम् ।
संपादिताः प्रणयिनो विभवैस्ततः किं
कल्पस्थितास्तनुभृतां तनवस्ततः किम् ॥ ६७ ॥

ப்ராப்தா: ஸ்ரிய: ஸகல காமதுகா: தத: கிம்
ந்யஸ்தம் பதம் ஸிரஸி விதவிஷதாம் தத: கிம் ।
ஸம்பாதிதா: ப்ரணயினோ விபவைஸ்தத: கிம்
கல்பஸ்திதா: தனுப்ருதாம் தனவ: தத: கிம் ॥

ஸகல் காமதுகா: - எல்லா இஷ்டங்களையும் கொடுக்க வல்ல, ஶ்ரிய: - ஐஸ்வர்யங்கள், ப்ராப்தா: - அடையப்பட்டன. தத: கிம் - அதனால் என்ன? வித்விஷதாம் - சத்ருக்களுடைய, ஶிரஸி - தலையில், பதம் - கால், ந்யஸ்தம் - வைக்கப்பட்டது. தத: கிம் - அதனால் என்ன லாபம்? விபவை: - மஹிமைகளால், ப்ரணயின: - மித்ரர்கள், ஸம்பாதிதா: - வசப்பட்டிருக்கிறார்கள். தத: கிம் - அதனால் என்ன? தனுப்ருதாம் - ப்ராணிகளுடைய, தனவ: - சரீரங்கள், கல்பஸ்திதா: - கல்பகாலம் வரையில் இருக்கின்றன. தத: கிம் - அதனாலும் என்ன பலன்?

ஐஹிக ஸுகங்களை யாவற்றையும் ஒருவன் அடைந்துவிட்டால்கூட அவைகளால் பரலோக ஶ்ரேயஸ் கிட்டாதென்பதும் ஐஹிக ஸுகங்கள் அஸ்திரங்களென்பதும் இந்த ச்லோகத்தினால் காட்டப்படுகிறது. ஸகல ஸம்பத்தையும் அடைந்து, சத்ருக்களையும் ஜயித்து, நீண்ட காலம் சரீரம் தரிக்கும்படி செய்துகொண்டாலும் அவைகளால் என்ன பயன், என்பதை விவேகத்துடன் கவனிக்கவேணுமென்றபடி.

भक्तिर्भवे मरणजन्मभयं हृदिस्थं
स्नेहो न बन्धुषु न मन्मथजा विकाराः ।
संसर्गदोषरहिता विजना वनान्ता
वैराग्यमस्ति किमितः परमर्थनीयम् ॥ ६८ ॥

பக்தி: பவே மரண ஜன்மபயம் ஹ்ருதிஸ்தம்
ஸ்நேஹோ ந பந்துஷு ந மன்மதஜா விகாரா: ।
ஸம்ஸர்க தோஷரஹிதா விஜநா வநாந்தா:
வைராக்யமஸ்தி கிமித: பரமர்த்தநீயம் ॥

பவே - பரமசிவனிடம், பக்தி: - பக்தியென்ன, ஹ்ருதி ஸ்தம் - மனதிலுள்ள, மரண ஜன்மபயம் - இறப்பு பிறப்பு பயமென்ன, பந்துஷு - பந்துக்களிடம், ந ஸ்நேஹ: - அபி மான மில்லாமையென்ன, மன்மதஜா விகாரா: - காம விகா ரங்கள், ந - இல்லாமையென்ன, ஸம்ஸர்க தோஷரஹிதா:- சேர்க்கை தோஷமற்ற, விஜநா: - ஜன சஞ்சாரமற்ற, வநாந் தா: - காட்டு பிரதேசங்களில் ருசியென்ன, ஆகிய ஸாதனங் களிலிருந்து, வைராக்யமஸ்தி யதி - வைராக்யமும் இருந் தால், இத: பரம் - இதைவிட வேறு, அப்யர்த்தநீயம் - வேண்டத்தக்கது, கிம் - எது?

ஐஹிக ஸுகங்கள் சிரேயஸ் ஸாதனமல்லவாகையால் உண்மையாக சிரேயஸ் ஸாதனங்கள் எவை? அதைக் கவி சொல்லுகிறார். பரமசிவனிடம் பக்தியும், பிறப்பு இறப்பில் பயமும், பந்துக்களிடம் பாசமற்ற நிலைமையும், மன்மத விகாரமற்ற நிலைமையையும் ஏற்பட்டு மன நிம்மதி ஏற்படக் கூடிய ஆரண்யங்களில் வஸித்து வைராக்யமும் ஒருவனுக்கு ஏற்பட்டால் இவைகளைவிட சிரேயஸ் ஸாதனங்களாக வேறு எவையிருக்கின்றன?

तस्मादनन्तमजरं परमं विकासि
तद्ब्रह्म चिन्तय किमेभिरसद्विकल्पैः ।
यस्यानुषङ्गिण इमे भुवनाधिपत्य-
भोगादयः कृपणलोकमता भवन्ति ॥ ६९ ॥

தஸ்மாதனந்த மஜரம் பரமம் விகாஸி
தத்ப்ரும்ஹ சிந்தய கிமேபிரஸத் விகல்பை:।
யஸ்யாநு ஷங்கிண: இமே புவனாதிபத்ய
போகாதய: க்ருபண லோகமதா பவந்தி ॥

தஸ்மாத் - ஆகையால், அநந்தம் - எல்லையற்றதும், அஜரம் - ஜராமரணமில்லாததும், விகாஸி - ப்ரகாசிக்கிறதுமான, தத்பரமம்ப்ரும்ஹ - அந்த பரப்ர்மத்தையே, சிந்தய - த்யானம்செய். ஏபி: - இந்த, அஸத் விகல்பை: - துச்சமான, ஸங்கேகால்பதங்களால், கிம் - என்ன பயன்? யஸ்ய - எந்த ப்ரம்ஹத்தின், அநுஷங்கிந: - பரிசயம் பெற்ற உனக்கு, இமே - இந்த, புவநாதிபத்ய போகாதய: - மூன்றுலோக, ஸ்வர்கலோக போகாதிகளான ஸுகங்கள், க்ருபண லோக மதா: - பாமர ஜனங்களுக்கு ஆசைப்படத் தக்கவைகளாக, பவந்தி - ஆகுகின்றன.

ஆகையால் வைராக்யமே முக்யமாதலால் அதைப்பெற்று உயர்ந்ததும் எல்லையற்றதும், ஜோதிஸ்வரூபியாயுமிருக்கிற அந்த பிரும்மத்தையே த்யானம் செய்வாயாக! மற்ற ஸாதனங்கள் பயன்படுபா படாதாவென்ற யோஜனை என் செய்யவேணும்? மேற்கண்டபடி பிரும்ம த்யானத்தில் அமர்ந்த உனக்கு மூன்றுலோகங்களோ ஸ்வர்க்காதி போகங்களோ பாமரர்களுக்கு ஏற்றவை என்ற நிர்ணயம் ஏற்படுவது நிச்சயம்.

पातालमाविशसि यासि नभो विलङ्घ्य
दिङ्मण्डलं भ्रमसि मानस चापलेन ।
भ्रान्त्यापि जातु विमलं कथमात्मनीनं
न ब्रह्म संस्मरसि निर्वृतिमेपि येन ॥ ७० ॥

பாதாள மாவிஶஸி யாஸி நபோ விலங்க்ய
திங்மண்டலம் ப்ரமஸி மாநஸ சாபலேந ।
ப்ராந்த்யாபி ஜாது விமலம் கதமாத்மநீநம்
ந ப்ரம்ஹ ஸம்ஸ்மரஸி நிர்விருதி மேஷி யேந ॥

19

ஹே மானஸ! ஏ! மனமே! சாபலேந - அதிக சபலத்தால் இஷ்ட ஸித்திக்காக, பாதாளம் - பாதாள லோகத்திற்கும், ஆவிசஸி - பிரவேசிக்கிறாய், நப: - ஆகாசத்தையும் விலங்க்ய - தாண்டி, யாஸி - ஓடுகிறாய், திங்மண்டலம் - எல்லா திசைகளிலும், ப்ரமஸி - சுற்றித்திரிகிறாய்; ஆனால் யேந - எந்த பிர்ம்ஹ த்யானத்தால், நிர்விருதிம் - க்ஷேமத்தை, வ்ரஜே: - அடைவாயோ, அந்த ஆத்மநீநம் - ஆத்ம ஹிதமான, விபுலம் - சுத்தமான, ப்ரும்ஹ - பிர்ம்ஹத்தை, ப்ராந்த்யாபி - விரம வசத்தால்கூட, ஜாது - ஒரு போதுகூட, ந ஸம்ஸ்மரஸிததம் - ஏன் நினைக்க மறுக்கிறாயே!

ஏ! மனமே! உனக்குத் தோன்றிய ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள எதையும் செய்ய நீ துணிந்திருக்கிறாய். பாதாளம் போவாய். ஆகாயம் தாண்டி ஓடுவாய். எல்லா திசைகளிலும் சுற்றுவாய். இவ்வளவு பாடுபடும் நீ, ஸகல ஸாதனமான ஆத்ம சிரேயஸ்கரமான அந்த சுத்த பிரம்மத்தை தட்டுக்கெட்டு பிரமத்தால்கூட ஒருபோதும் நினைக்கமாட்டேனென்கிறாயே, இதுதான் ஆச்சர்யம்!

किं वेदैः स्मृतिभिः पुराणपठनैः शास्त्रैर्महाविस्तरैः
स्वर्गग्रामकुटीनिवासफलदैः कर्मक्रियाविभ्रमैः ।
मुक्त्वैकं भवदुःखभाररचनाविध्वंसकालानलं
स्वात्मानन्दपदप्रवेशकलनं शेषैर्वणिग्वृत्तिभिः ॥ ७१ ॥

கிம் வேதை: ஸ்ம்ருதிபி: புராணபடனை:
ஶாஸ்த்ரைர் மஹா விஸ்தரை:
ஸ்வர்க்க கிராமகுடீ நிவாஸபலதை:
கர்மக்ரியா விப்ரமை: ।
முக்த்வைகம் பவ துக்க பார ரசநா
வித்வம்ஸ காலா நலம்
ஸ்வாத்மாநந்த பத ப்ரவேச கலநம் ஶேஷை:
வணிக் வ்ருத்திபி: ॥

வேதை: - வேதங்களால், கிம் - என்ன பயன்? புராண படனை: - புராணங்கள் படிப்பதினால் (என்ன பயன்) ஸ்மிருதிபி: - ஸ்ம்ருதிகளாலும், மஹா விஸ்தரை: - மிக விஸ்தாரமான, ஶாஸ்த்ரை: - சாஸ்திரங்களாலோ, ஸ்வர்க்க க்ராம - ஸ்வர்க்கமாகிற கிராமத்திலுள்ள, குடி - குடிசையில், நிவாஸ - வஸிப்பதான, பலதை: - பலனைக் கொடுக்கிற, கர்மக்ரியா விப்ரமை:- கர்மாக்களாலும் கிரியையாகிற கார்யங்களாலும், கிம் - என்ன பயன்? பவ து:க்க பார ரசனா வித்வம்ஸ காலாநலம் - ஸம்ஸாரமாகிற து:க்க பாரத்தை த்வம்ஸம் செய்வதில் காலாக்நி போன்றதும், ஸ்வாத்மானந்த பதப்ரவேச கலநம் - தனது ஆத்மானந்தமாகிற ஸ்தானத்தை அடையச் செய்கிறதான, ஏகம் - முக்யமான ச்ரேயஸ்கர, வணிக்வ்ருத்திபி:- வியாபாரத் தொழில்போன்ற, சேஷை: - மற்ற கார்யங்களால், கிம் - என்ன பயன்?

கவி இந்த சதகத்தில் நித்யாநித்யவஸ்து விசார வ்யாஜத்தில் ஆத்மானந்தானுபவமே ச்ரேயஸ்கரமென்பதை விவரிக்கிறார்.

வேதாத்யயன, ஸ்மிருதிபுராணாதி பரிசயங்களாலோ, ஸ்வர்க்காதி அல்பஸுக ஹேதுவான ஸந்த்யாயாகாதி கர்மங்களாலோ எவ்விதசிரேயஸ்ஸும் மனிதனுக்கு ஏற்படாது ஸம்ஸார தாபத்தை நசிக்கச்செய்து ஆத்மானுபவத்தில் ப்ரவேசிப்பதே க்ஷேமமாகும்.

यतो मेरुः श्रीमान्निपतति युगान्ताग्निवलितः
समुद्राः शुष्यन्ति प्रचुरमकरग्राहनिलयाः ।
धरा गच्छत्यन्तं धरणिधरपादैरपि धृता
शरीरे का वार्ता करिकलभकर्णाग्रचपले ॥ ८२ ॥

யதோ மேரு: ஸ்ரீமான் நிபததி யுகாந்தாக்நி வளித:
ஸமுத்ரா: ஶுஷ்யந்தி ப்ரசுர மகரக்ராஹ நிலயா: ।
தரா கச்சத்யந்தம் தரணிதர பாதைரபி த்ருதா
ஶரீரே காவார்த்தா கரிகலப கர்ணாக்ர சபலே ॥

யத: - ஏனெனில், மேரு: - மேருமலைகூட, யுகாந்தாக்நி வளித: - பிரளயகால அக்நியால் சூழப்பட்டு, நிபததி - வீழ்கிறது. ப்ரசுர மகரக்ராஹநிலயா: - ஏராளமான, மத்ஸ்யம் - முதலைகளுக்கு இருப்பிடமான, ஸமுத்ரா: - ஸமுத்ரங்களும், ஶுஷ்யந்தி - சோஷித்துப்போகின்றன. தரணிதரபாதை: - பர்வதங்களால், த்ருதா: - தரிக்கப்படுகிற, தரா - பூமி கூட அந்தம் - நாசத்தை, கச்சதி - அடைகிறது. கரிகலப கர்ணாக்ர சபலே - யானையின் காது நுனிபோல் சஞ்சலமான, சரீரே - மனித சரீர விஷயத்தில், காவார்த்தா - என்ன பேச்சு ?

மேருமலையும் யுகாந்தத்தில் அக்நியால் சூழப்பட்டு வீழ்கிறது. ஏராளமான பிராணிகளுடன்கூடிய ஸமுத்ரங்களும் ஒரு காலத்தில் சோஷிக்கின்றன. மலைகளால் தாங்கப்படுகிற பூமியும் பிரளயகாலத்தில் நாசமடைகிறது. இப்படியிருக்க மிகவும் சஞ்சலமான மனிதசரீர நிலைமையைப்பற்றிப் பேச வேண்டுமா ? ஆதலால் ஆத்மானந்தானுபவத்தில் ஈடுபட வேணும்.

गात्रं संकुचितं गतिर्विगलिता भ्रष्टा च दन्तावलि-
र्दृष्टिर्नश्यति वर्धते बधिरता वक्त्रं च लालायते ।
वाक्यं नाद्रियते च बान्धवजनो भार्या न शुश्रूषते
हा कष्टं पुरुषस्य जीर्णवयसः पुत्रोऽप्यमित्रायते ॥ ७३ ॥

காத்ரம் ஸங்குசிதம் கதிர் விகளிதா ப்ரஷ்டாச தந்தாவளி:
த்ருஷ்டி: நஶ்யதி வர்த்ததே பதிரதா வக்த்ரஞ்ச லாலாயதே।
வாக்யம் நாத்ரியதேச பாந்தவ ஜன: பார்யா ந சுச்ரூஷதே
ஹா கஷ்டம் புருஷஸ்ய ஜீர்ண வயஸ: புத்ரோபி [அமித்ராயதே ॥

காத்ரம் - சரீரமானது, ஸங்குசிதம் - சுருங்கிவிட்டது. கதி: - நடையோ, விகலிதா - தழதழத்துவிட்டது. தந்தாவலி: - பல் வரிசையும், ப்ரஷ்டா - விழுந்துவிட்டது. த்ருஷ்டி: - பார்வையும், நச்யதி - நாசமடைந்துவிட்டது. பதிரதா - செவிட்டுத்தன்மையானது, வர்த்ததே - விருத்தியடைகிறது. வக்த்ரம் - வாய், லாலாயதே - எச்சல் ஜலம் வழிகிறது. பாந்தவஜனா: - பந்துஜனங்கள், வாக்யம் - இவனுடைய வார்த்தையை, காத்ரியதே - ஆதரிப்பதில்லை. பார்யா - பத்நியும், ஸுச்ரூஷதே - உபசரிப்பதில்லை. ஜீர்ணவயஸ: - கிழத்தன வயதுள்ள, புருஷஸ்ய - மனிதனுக்கு, புத்ரோபி - பிள்ளையும், அமித்ராயதே - சத்ருவாகிறான். ஹா - கஷ்டம்!

கிழத்தனமடைந்த மனிதனுக்கு சரீரம் சுருங்கியும், நடை தழுதழுத்து பற்கள் விழுந்து, கண் பார்வை குறைந்து காது அடைத்து, வாயில் ஜலம் வழியும் நிலைமையும் ஏற்படுகிறது. பந்துஜனங்கள் இவனுடைய வார்த்தையை லக்ஷ்யம் செய்வதில்லை. அதிகமேன்? பிள்ளைகூட சத்ருவாகி விடுகிறான். இவ்வளவு அபாலமுள்ள வாழ்க்கையை வெறுத்து ஆத்மானந்தானுபவம் பெற முயற்சிக்கவேணும்.

वर्णं सितं झटिति वीक्ष्य शिरोरुहाणां
स्थानं जरापरिभवस्य तदा पुमांसम् ।
आरोपितास्थिशतकं परिहृत्य यान्ति
चण्डालकूपमिव दूरतरं तरुण्यः ॥ ७४ ॥

வர்ணம் ஸிதம் ஜடிதி வீக்ஷ்ய ஶிரோருஹாணாம்
ஸ்தானம் ஜரா பரிபவஸ்ய ததா புமாம்ஸம் ।
ஆரோபிதாஸ்தி ஶதகம் பரிஹ்ருத்ய யாந்தி
சண்டாள கூபமிவ தூரதரம் தருண்ய: ॥

தருண்ய: - யுவதிகள், ஶிரோருஹாணும் - தலை மயிர்களுடைய, ஸிதம் வர்ணம் - வெளுத்த வர்ணத்தை, ஜடிதி வீக்ஷ்ய - சீக்கிரமாகப்பார்த்தும், ஜரா பரிபவஸ்ய - கிழத்தன அவமானத்திற்கு, ஸ்தானம் - இருப்பிடமான, புமாம்ஸம் - புருஷனை, ஆரோபிதாஸ்தி ஶதகம் - வெளிப்படையான அநேக எலும்புகளை உடைய நிலையில், சண்டாள கூபமிவ - சண்டாளனுடைய கிணற்றைப்போல், ப்ரஹ்ருத்ய - விலக்கிவிட்டு, தூரதரம் - வெகுதூரத்தில், யாந்தி - போகிறார்கள்.

மனிதன் கிழத்தனமடைந்ததும் அவனுடைய சிரஸ் வெளுத்து கிழத்தனத்தால் அவமதிக்கப்பட்டு உடம்பு எலும்புகள் வெளிப்படையாக தெரிய ஆரம்பித்தவுடன் யுவதிகள் இவனை சண்டாளன் கிணறுபோல் தள்ளிவிட்டு ஒதுங்கிப்போய்விடுகிறார்கள்.

यावत्स्वस्थमिदं शरीरमरुजं यावज्जरा दूरतो
यावच्चेन्द्रियशक्तिरप्रतिहता यावत्क्षयो नायुषः ।
आत्मश्रेयसि तावदेव विदुषा कार्यः प्रयत्नो महा-
न्संदीप्ते भवने तु कूपखननं प्रत्युद्यमः कीदृशः ॥ ७५ ॥

யாவத் ஸ்வஸ்தமிதம் சரீர
மருஜம் யாவஜ்ஜரா தூரத:
யாவச் சேந்த்ரிய சக்தி: அப்ரதிஹதா
யாவத்க்ஷயோ நாயுஷ: ।
ஆத்மச்ரேயஸி தாவதேவ விதுஷா
கார்ய: ப்ரயத்னோ மஹான்
ஸந்தீப்தே பவனே து கூப
கனனம் ப்ரத்யுத்யம: கீத்ருச: ॥

இதம் சரீரம் - இந்த சரீரமானது, யாவத் - எதுவரை யில், ஸ்வஸ்தம் - உபத்ரவமில்லால் இருக்கிறதோ, அரு ஜம் - வியாதியில்லாமலிருக்கிறதோ, ஜரா - கிழத்தன மானது, யாவத் - எதுவரையில், தூரத: - ஒதுங்கியிருக் கிறதோ, இந்திரிய சக்தி: - இந்திரியங்களின் பலமானது, யாவத் - எதுவரையில், அப்ரதிஹதா - குன்றுமலிருக்கிற தோ, ஆயுஷ: - ஆயுஸுக்கு, யாவத் - எதுவரையில், க்ஷய: - குறைவில்லையோ. தாவதேவ - அதற்குள்ளேயே, விதுஷா - அறிவாளியால், ஆத்மஸ்ரேயஸி - ஆத்மாவின் க்ஷேமத்தில், ப்ரயத்ந: - முயற்சியானது, மஹான் - பெரி தாக, கார்ய: - செய்யத்தக்கது. பவநே - வீடானது, ஸந் தீப்தேது - எரிய ஆரம்பித்தபிறகு, கூபகநநம் ப்ரதி - கிணறு வெட்டுவதைப்பற்றி, உத்யம: - முயற்சியானது, கித்ருஶ: - எத்தகையது ?

மனிதன் சரீரமானது ரோகமற்றும், கிழத்தனமேற் படாமலும் இந்திரிய சக்தி குறையாமலும் ஆயுள் குறையா மலுமிலிருக்குமுன்பே ஆத்மார்த்த க்ஷேமத்தில் முயற்சி எடுக்கவேணும். வீடு பற்றியெரிய ஆரம்பித்தபிறகு கிணறு வெட்ட முயற்சிப்பது விவேகமாகுமா ?

तपस्यन्तः सन्तः किमधिनिवसामः सुरनदीं
गुणोदारान्दारानुत परिचरामः सविनयम् ।
पिबामः शास्त्रौघानुत विविधकाव्यामृतरसा-
न्न विद्मः किं कुर्मः कतिपयनिमेषायुषि जने ॥ ७६ ॥

தபஸ்யந்தஸ்ஸந்த: கிமதிநிவஸாம: ஸுரநதீம்
குணோதாராந் தாராநுத பரிசராமஸ்ஸவிநயம் ।
பிபாம: சாஸ்த்ரௌகாநுத விவிதகாவ்யாம்ருதரஸாந்
ந வித்ம: கிம்குர்ம: கதிபய நிமேஷாயுஷி ஜநே ॥

தபஸ்யந்தஸ்ஸந்த: - தபஸ் செய்துகொண்டு, ஸ்வர நதீ - கங்கா தீரத்தில், அதிவஸாம: கிம் - வஸிப்போமா ? குணோதராந் - நற்குணத்தால் சோபிக்கிற, தாராந் - ஸம் ஸாரங்களை, ஸ விநயம் - பிரீதியுடன், கிம் பரிசராம: - உப சரிப்போமா? சாஸ்த்ரெளகாந் - சாஸ்திரங்களை, பிபாம: - பானம் செய்வோமா? உத - அல்லது, விவித காவ்யாம்ருத ரஸாந் - நாநாவித காவ்யரஸமாகிற அம்ருதத்தை, பிபாம: - பருகுவோமா ? ஜநே - ஜனமானது, பரிமித நிமேஷா யுஷி - அல்பமான நிமிஷகால ஆயுஸ் உள்ளவனுயிருக்கை யில், கிம் குர்ம: - என்ன செய்வோம் ? ந வித்ம: - அறி யோம்.

மனிதனுடைய ஆயுஸ் இமைக்கொட்டும் காலத்திற்கு ஸமமாக அல்பமாயிருக்கையில் எந்த கார்யத்தைத்தான் அவன் பூர்ணமாகச் செய்யமுடியும். தபஸ் செய்து கங்கா தீரத்தில் வஸிப்பதா, ஸம்ஸார ஸுகாநுபவம் பண்ணு வதா ? காவ்ய சாஸ்த்ராநுபவம் செய்வதா ஒன்றும் புரிய வில்லை. ஆகையால் ஆத்மார்த்த ஸ்ரேயஸுக்கு முயற்சிக் கவும்.

दुराराध्याश्चामी तुरगचलचित्ताः क्षितिभुजो
वयं च स्थूलेच्छाः सुमहति फले बद्धमनसः ।
जरा देहं मृत्युर्हरति दयितं जीवितमिदं
सखे नान्यच्छ्रेयो जगति विदुषोऽन्यत्र तपसः ॥७७॥

துராராத்யாஸ்சாமீ துரகசலசித்தா: க்ஷிதி புஜ:
வயம் ச ஸ்தூலேச்சா: ஸுமஹதி பலே பத்தமனஸ:।
ஜராதேஹம் ம்ருத்யு: ஹரதி தயிதம் ஜீவிதமிதம்
ஸகே நாந்யத் ஶ்ரேய: ஜகதி விதுஷோऽந்யத்ர தபஸ:॥

துரகசல சித்தா: - குதிரையின் மனதுபோல் சஞ்சல மனதுடைய, அபீக்ஷித்புஜ: - இந்த அரசர்கள், துராராத்யா: - திருப்தி செய்துவைக்க முடியாதவர்கள். வயம் ச - நாமும். ஸ்துலேச்சா: - பெரிய ஆசையுள்ளவர்கள், ஸுமஹதி பலே - பெரிய பலனில், பத்த மனஸ: - இசைந்த மனதுள்ளவர்கள். ஜரா - கிழத்தனமானது, தேஹம் - சரீரத்தை, ஹரதி - இழுக்கிறது. தயிதம் - இஷ்டமான, ஜீவிதம் - உயிரை, ம்ருத்யு: - யமன், ஹரதி - இழுக்கிறான். ஸகே - ஏ! மித்ரனே! விதுஷ: - அறிவாளிக்கு, தபஸ: அந்யத்ர - தபஸ்ஸைத்தவிர, அந்யத் - வேறான, ச்ரேய: - க்ஷேமமானது, ந - இல்லை.

மிகவும் உறுதியற்ற அரசர்களை அண்டி திருப்திசெய்து வைத்து க்ஷேமமடைவது சிரமம். நமக்கோ ஆசை அதிகம். பெரிய லாபத்தில் மனது ஊன்றியிருக்கிறது. கிழத்தனம் தேஹத்தை ஆக்ரமிக்கிறது. ம்ருத்யு ப்ராணனை அபஹரிக்கிறான். ஆகையால், மித்ரனே! உலகில் அறிவாளிக்கு தபஸ் தவிர வேறு சிரேயஸ் கிடையாது.

मानै म्लायिनि खण्डिते च वसुनि व्यर्थे प्रयातेऽर्थिनि
क्षीणे बन्धुजने गते परिजने नष्टे शनैर्यौवने ।
युक्तं केवलमेतदेव सुधियां यज्जन्हुकन्यापयः-
पूतग्रावगिरीन्द्रकन्दरतटीकुञ्जे निवासः क्वचित् ॥७८

மானே ம்லாயினி கண்டிதே ச வஸுனி
வ்யர்த்தே ப்ரயாதேऽர்த்தினி
க்ஷீணே பந்துஜனே கதே பரிஜனே
நஷ்டே சனைர் யௌவனே ।
யுக்தம் கேவலமேததேவ ஸுதியாம்
யஜ்ஜன்ஹு கன்யாபய:
பூதக்ராவ கிரீந்த்ர கந்தரதட
குஞ்ஜே நிவாஸ: க்வசித் ॥

மாநே - கௌரவமானது, ம்லாயிநி - குறைந்த பிறகு, அர்வஸ-ஙி - தனமானது, கண்டிதே - நஷ்டமான பின், அர்த்தினி - அதிதியானவன், வ்யர்திதே - ப்ரயோஜனம் பெறுமல், ப்ரயாதே - திரும்பிப்போனதும், பந்துஜநே - பந்து ஜனங்கள், க்ஷீணே - குறைந்ததும், பரிஜநே - வேலைக்காரர்கள், கதே - போய்விட்ட பிறகு, யௌவநே - யௌவனமானது. ஶனை: நஷ்டே - கொஞ்சம் கொஞ்சமாக குறைந்தும் போனபிறகு, விதுஷாம் அறிவாளிகளுக்கு, ஏதத் ஏவ - கேவலம் இது தான், யுக்தம் - யுக்தமாகும், யத் - ஏதென்முல், ஜஹ்நு கந்யா - கங்கையினுடைய, பய: பூதக்ராவே - ஜலத்தால் பரிசுத்தமான சிலையை உடைய, கிரீந்த்ர - ஹிமாலயத்தின், கந்தரதடீ குஞ்ஜே:-குஹைப் பிரதேசத்திலுள்ள லதாகிருஹத்தில் க்வசித் - ஓரிடத்தில், நிவாஸ: - வஸிப்பது தான்.

பனிதனுக்கு கௌரவம் குறைந்து பணம் நஷ்டமாகி பந்துக்களும், வேலைக்காரர்களும் ஒதுங்கி யௌவநமும் போன பிறகு செய்யவேண்டியதென்ன ? கங்கா ஜலத்தால் பரிசுத்தமான கல் தரையுள்ள ஹிமாலயத்தில் குஹைப் பிரதேசமொன்றில் வஸிப்பதுதான் அறிவாளிக்கு யுக்தமானது.

रम्याश्चन्द्रमरीचयस्तृणवती रम्या वनान्तस्थली
रम्यं साधुसमागमागतसुखं काव्येषु रम्याः कथाः ।
कोपोपाहितबाष्पबिन्दुतरलं रम्यं प्रियाया मुखं
सर्वं रम्यमनित्यतामुपगते चित्ते न किंचित्पुनः ॥७९

ரம்யா: சந்த்ரமரீசய: த்ருணவதீ
ரம்யா வநாந்த ஸ்தலீ

ரம்யம் ஸாதுஸமாகமாகத ஸுகம்
காவ்யேஷு ரம்யா: கதா: |
கோபோபாஹித பாஷ்பபிந்து தரளம்
ரம்யம் ப்ரியாயா முகம்
ரம்யம் ஸர்வம நித்யதாமுபகதே
சித்தே ந கிஞ்சித் புந: ||

சந்த்ரமரீசய: - சந்திரகிரணங்கள், ரம்யா: - அழகானவை, த்ருணவதீ - புல் அடர்ந்த, வநாந்தஸ்தலீ - காட்டுப் பிரதேசமானது, ரம்யா - அழகானது, ஸாதுஸமாகமாகத ஸுகம் - ஸாதுக்களுடைய ஸங்கத்தால் ஏற்பட்ட ஸுகமும், ரம்யம் - அழகானது. காவ்யேஷு - காவ்யங்களில், கதா: - கதைகள், ரம்யா: - மனோஹரங்கள். கோபோபாஹித - கோபத்தினால் உண்டான, பாஷ்பபிந்து - கண்ஜலத்தால், தரளம் - சஞ்சலமான, பிரியாயா: - பார்யையினுடைய முகம் - முகமானது, ரம்யம் - அழகுள்ளது, இம்மாதிரியாக ஸர்வம் - எல்லாமே, ரம்யம் - மனோஹரமானவதே. ஆனால் சித்தே - மனதானது, அநித்யதாம் - எல்லாம் அநித்யம என்ற ஞானத்தை, உபகதே - அடைந்து விட்டால், கிஞ்சித் புந: - மேற்சொன்ன ஒன்றுகூட, ந ரம்யம் - அழகானதல்ல.

மனிதனுடைய சித்தமானது நித்யாநித்யவஸ்து விவேகத்தை அடைந்துவிட்டால் உலகில் அழகாக விரும்பக்கூடியவைகள் கூட அழகற்றவையாகத் தோன்றும். அழகிய சந்திரகிரணமோ, மனோஹரமான புல் படர்ந்த காட்டுப் பிரதேசங்களோ, ஸத்ஸங்க ஸுகமோ இனிய காவ்ய கதைகளோ, பார்யையின் கோபக் கண்ஜலம் ஆடும் அழகிய முகமோ எதுவும், அநித்யத்வஞானம் அடைந்தவனுக்கு அழகாகத் தோன்றாது.

रम्यं हर्म्यतलं न किं वसतये श्राव्यं न गेयादिकं
किं वा प्राणसमासमागमसुखं नैवाधिकप्रीतये ।
किंतु भ्रान्तपतङ्गपक्षपवनव्यालोलदीपाङ्कुर
च्छायाचञ्चलमाकलय्य सकलं सन्तो वनान्तं गताः॥

ரம்யம் ஹார்ம்யதலம் நகிம்
வஸதயே ச்ராவ்யம் ந கேயாதிகம்
கிம்வாப்ராண ஸமாஸமாகம
ஸுகம் நைவாதிக ப்ரீதயே |
கிம்து ப்ராந்த பதங்க பக்ஷபவ
நவ்யா லோக தீபாங்குரச்சாயா
சஞ்சலமாக லய்ய ஸகலம்
ஸந்தோ வநாந்தம் கதா: ||

ரம்யம் - அழகிய, ஹாம்யம் - உப்பரிகையானது, வஸதயே - வஸிப்பதற்கு, நகிம் - இல்லையா? ச்ராவ்யம் - காதுக்கு இனிமையாக, கேயாதிகம் - கானம் முதலியவை, நகிம் - இல்லையா? ப்ராணஸமா - ப்ராணனுக்கு ஸமமான பார்யையின், ஸமாகம ஸுகம் - சேர்க்கை ஸுகமானது, அதிக ப்ரீதயே - அதிக ஸந்தோஷத்தின் பொருட்டு, நகிம் வா - இல்லையா என்ன? கிந்து - ஆனால் ப்ராந்த பதங்க - பறக்கிற பூச்சியினுடைய, பக்ஷபவந - இறக்கை காற்று வேகத்தால், வ்யாலோல - சஞ்சலமாயுள்ள, தீபாங்குர - தீபத்தின் நுனியின், சாயாசஞ்சலம் - சாயைபோல் சஞ்சலமாக, ஸகலம் - எல்லாவற்றையும், ஆகலய்ய - நிச்சயித்து, ஸந்த: - பெரியோர்கள், வநாந்தம் - காட்டுப் பிரதேசங்களை கதா: - அடைந்தார்கள்.

ஸத்துக்களான பெரியோர்களுக்கு வஸிக்க அழகிய உப்பரிகையில்லையா? இனிய ஸங்கீத காவ்ய கதாதிகளால் திருப்தியடையக் காதில்லையா? பிராண ஸமையான பார்யையின் ஸமாகமஸுகமில்லையா? ஆனால் இவ்வளவிருந்தும்

இவையெல்லாம் தீபச்சாயைபோல் சஞ்சலம் என்று நிச்ச யித்து அந்தப் பெரியோர்கள் இவைகளை த்யஜித்து ஆரண் யம் சென்று தபஸ்ஸையே கைக்கொண்டனர்.

आसंसारात्त्रिभुवनमिदं चिन्वता तात तादृङ्
नैवास्माकं नयनपदवीं श्रोत्रमार्गं गतो वा ।
योऽयं धत्ते विषयकरिणीगाढगूढाभिमान-
क्षीबस्यान्तः करणकरिणः संयमानायलीलाम् ॥८१॥

ஆஸம்ஸாரத் த்ருபுவனமிதம்
ஸிந்வதாம் தாத தாத்ருக்
நைவாஸ்மாகம் நயநபதவீம்
ச்ரோத்ர மார்க்கம் கதோவா |
யோ ऽயம் தத்தே விஷய கரிணீ
காடகூடாபிமாந
க்ஷீபஸ்யாந்த: கரணகரிண:
ஸம்யமாநாய லீலாம் ||

தாத! - அய்யனே! ஆஸம்ஸாராத் - பிறந்தது முதல், இதம் திருபுவனம் - இந்த மூன்று உலகத்தையும், ஸிந்வ தாம் - தேடுகிற, அஸ்மாகம் நமக்கு, தாத்ருக் - அப்படிப் பட்ட வஸ்துவானது வேறு எதுவும், நயநபதவீம் - கண் மார்க்கத்திலோ, ச்ரோத்ர மார்க்கம் - காது வழியிலோ, கத: - அடையவில்லை, விஷய கரீணீ-ஸம்ஸாரமாகிற பெண் யானையிடம், காட - உறுதியான, கூட - ரஹஸ்யான, அபி மான க்ஷீபஸ்ய - ஆசையால் மதம் கொண்ட, அந்த: கரண கரிண: - மனதாகிற யானையினுடைய, ஸம்யமாநாய லீலாம்- கட்டுவதற்கான சங்கிலிபோன்ற நிலையை, யோऽயம் தத்தே - எந்த ஈதன் வஹிக்கிறனோ,

கவி இந்த சதகத்தில் சிவார்ச்சன வைபவத்தை விவரிக்கிறார். அய்யனே! பிறந்தது முதல் இந்த மூன்று உலகிலும் ஸம்ஸாரமாகிற பெண்யானையிடம் ஆசையால் மதம் பிடித்து நிற்கிற மனஸ்ஸாகிற ஆண்யானையைக் கட்டிப்போடக்கூடிய மஹிமை பெற்ற ஈச்வரனைப்போல் வேறு எவரும் காதிலோ கண்களிலோ நம்மால் கேட்கவோ, பார்க்கவோபடவில்லை.

यदेतत्स्वच्छन्दं विहरणमकार्पण्यमशनं
सहार्यैः संवासः श्रुतमुपशमैकव्रतफलम् ।
मनो मन्दस्पन्दं बहिरपि चिरस्यापि विमृश-
न्न जाने कस्यैषा परिणतिरुदारस्य तपसः ॥ ८२ ॥

யதேதத் ஸ்வச்சந்தம் விஹரண
மகார்ப்பண்யமசநம்
ஸஹார்யைஸ் ஸம்வாஸ:
ச்ருதமுபசமைக வ்ரத பலம் |
மனோமந்தஸ்பந்தம்
பஹிரபி சிரஸ்யாபி விம்ருசன்
ந ஜானே கஸ்யைஷா
பரிணதி ருதாரஸ்ய தபஸ: ||

ஸ்வச்சந்தம் விஹரணம் - இஷ்டப்படி நடப்பதும், அகார்பண்யம் - தீனத்வமில்லாத, அசநம் - போஜனமும், ஆர்யை: ஸஹ - பெரியோர்களுடன், ஸம்வாஸ: - ஸஹவாஸமும், உபசமைக வ்ருத பலம் - சாந்தியையே முக்யமான பலனாகக் கொண்ட, ச்ருதம் - படிப்பென்ன, பஹிரபி - வெளியிலும், மந்தஸ்பந்தம் - மிருதுவான ஸஞ்சாரமுள்ள,

மன: - மனமென்ன, இத்யாதியான, யதேதத் - வ்யாபார முண்டோ இவையெல்லாம், கஸ்ய - எந்த, உதாரஸ்ய - பெரிதான, தபஸ: - தபஸ்ஸினுடைய, ஏஷா பரிணதி: - இந்த பரிபாகம் என்பதை, சிரஸ்யாபி விம்ருசன் - வெகு காலம் யோஜித்தாலும், ந ஜானே - அறியேன்.

தன்னிஷ்டப்படி அதாவது பிறருக்கு உள்படாத ஸஞ்சாரமும், தீனதையில்லாத ஆஹாரமும், பெரியோர்களுடன் ஸஹவாஸமும், சாந்தியையே நோக்கமாக கொண்ட வித்யையும், அசஞ்சலமான மனதும் எனக்கு ஏற்பட்டதற்கு என்ன காரணமென்று யோஜித்தாலும் அறிய முடியவில்லை. சிவார்ச்சனமென்கிற தபஸ்தான் மேற்கண்ட ஆத்ம குணங்கள் உண்டாகக் காரணமென்று கருத்து.

जीर्णा एव मनोरथाश्च हृदये यातं च तद्यौवनं
हन्ताङ्गेषु गुणाश्च वन्ध्यफलतां याता गुणज्ञैर्विना ।
किं युक्तं सहसाभ्युपैति बलवान्कालः कृतान्तोऽक्षमी
हा ज्ञातं मदनान्तकाङ्घ्रियुगलं मुक्त्वास्ति नान्या गतिः

ஜீர்ணா ஏவ மனோரதா: ச
ஹ்ருதயே யாதம் ச தத்யௌவனம்
ஹந்தாங்கேஷு குணாஸ்ச வந்த்ய பலதாம
யாதா குணக்ஞைர் வினா ।
கிம் யுக்தம் ஸஹஸாப்யுபைதி பலவான்
கால: க்ருதாந்தோऽக்ஷமீ
ஹா! ஞாதம் மதனாந்த காங்க்ரி யுகளம்
முக்த்வாஸ்தி நான்யாகதி: ॥

மனோரதா: - பலவித ஆசைகள், ஹ்ருதய ஏவ - மன திலேயே, ஜீர்ணா: - மறைந்துவிட்டன. தத் - அத்தகைய யௌவனம் - யௌவன ஸௌகமும், அங்கேஷு - சரீரங் களிலிருந்தது, யாதம் - போய்விட்டது. குணாஸ்ச - நல்ல குணங்களும், குணக்ஞர்விநா-குணக்ஞர்களான பெரியோர் களில்லாமையால், வந்த்ய பலதாம் - ப்ரயோஜனமற்ற பல னுள்ளவையாக, யாதா: - ஆகிவிட்டன. அக்ஷமீ - பொறுக் காதவனும், பலவான் - பலிஷ்டனுமான, கால: க்ருதாந்த: - காலனுகிற யமன், ஸஹஸா - வேகமாக, அப்யுபைதி - வருகிறான். கிம் யுக்தம் ? - எது நல்லது ? ஹா - கஷ் டம். ஞாதம் - இப்போது தெரிந்தது. மதனாந்த காங்கரி யுகளம் - மன்மத சத்ருவான ஈசனுடைய பாதங்களிரண் டையும், முக்த்வா - விட்டு, அந்யா - வேறு, கதி: - கதி யானது, நாஸ்தி - இல்லை.

ஸம்ஸாரத்தில் மனிதனுக்கு எவ்வளவோ ஆசைகள் தோன்றியும் மனதிலேயே மறைகின்றன. நல்ல யௌவன முகம் சரீரத்திலிருந்து போய்விட்டது. படிப்பு ஸதா சாரம் முதலிய குணங்களும், குணக்ஞர்களான பெரியோர் களில்லாமையால், ப்ரயோஜனமற்றவையாகிவிட்டன. கால னே பொறுக்காமல் இழுக்க ஓடி வருகிறான். இந்த நிலை மையில் எது யுக்தம் ? தெரியவில்லையே! ஆயினும் இப் போது தெரிகிறது. பரமேச்வரனுடைய சரணங்களை விட்டு வேறு கதியில்லையென்பதே நிச்சயம்.

महेश्वरे वा जगतामधीश्वरे
जनार्दने वा जगदन्तरात्मनि ।
न वस्तुभेदप्रतिपत्तिरस्ति मे
तथापि भक्तिस्तरुणेन्दुशेखरे ॥ ८४ ॥

மஹேஶ்வரே வா ஜகதா மதீஶ்வரே
ஜனார்த்தனே வா ஜகதந்தராத்மனி ।
ந வஸ்து பேதப்ரதிபத்திரஸ்தி மே
ததாபி பக்தி: தருணேந்துசேகரே ॥

ஜகதாம் - உலகங்களுக்கு, அதீஶ்வரே - அதிபதியான, மஹேஶ்வரே வா - பரமசிவனிடமோ, ஜகதந்தராத்மனி - ஜகத்துக்கு அந்தராத்மாவான, ஜனார்த்தனே வா - ஜனார்தனனிடமாவது, மே - எனக்கு, வஸ்துபேத ப்ரதிபத்தி: - தனித்தனி வஸ்து என்கிற பேத எண்ணமானது, நாஸ்தி - இல்லை. ததாபி - அப்படியிருந்தும், தருணேந்து சேகரே - சந்திரசேகரனை பகவானிடம், மே - எனக்கு, பக்தி: - பக்தியுண்டாகிறது.

ஜகதீஶ்வரனான மஹேச்வரனிடமோ, ஜகதந்தர்யாமியான ஜனார்த்தனனிடமோ எனக்கு பேத புத்தியில்லை. ஆயினும் சந்திரசேகரனை பகவானிடம் எனக்கு பக்தி ஏற்படுகிறது.

स्फुरत्स्फारज्योत्स्नाधवलिततले क्वापि पुलिने
सुखासीनाः शान्तध्वनिषु रजनीषु द्युसरितः ।
भवाभोगोद्विग्नाः शिव शिव शिवेत्युच्चवचसः
कदा यास्यामोऽन्तर्गतबहुलबाष्पाकुलदृशाम् ॥ ८५॥

ஸ்புரத்ஸ்பார ஜ்யோத்ஸ்னா
தவளித தலே க்வாபி புளினே
ஸுகாஸீனா: சாந்தத்வனிஷு
ரஜனீஷு த்யுஸரித: ।
பவா போகோத் விக்னா: சிவ
சிவ சிவேத்யுச்சவஸ:
கதா யாஸ்யா மோந்தர்கத பஹு
பாஷ்பா குலதசாம் ॥

த்யுஸரித:- ஆகாசகங்கையினுடைய ஸ்புரத் - பிரகாசிக்
கிற, ஸ்பாரஜ்யோத்ஸ்நா - விருத்தியடைந்த சந்திரிகையால்,
தவளிததலே - வெண்ணிறமடைந்த, புளினே - மணல் திட்டில்,
க்வாபி - ஓரிடத்தில், ஸுகாஸீநா: - ஸுகமாக உட்கார்ந்து,
சாந்தத்வநிஷு - ஜநசப்தம் அடங்கியபிறகு, ரஜநிஷு - இர
வுகளில், பவாபோகோத்விக்நா: - ஸம்ஸார விஸ்தாரத்தில்
பயமடைந்தவர்களாய்க்கொண்டு, சிவ சிவ சிவேத்யுச்சவ
சஸ: - சிவசிவ சிவ என்ற நாமத்தை உச்சரித்துக்கொண்டு,
அந்தர்கத - மனதுக்குள்ளிருக்கும், பஹுள - அதிகமான,
பாஷ்பாகுலதசாம் - கண்ணீரால் கலங்கிய அவஸ்தையை, கதா -
எப்போது, யாஸ்யாம: - போக்கிக்கொள்ளுவோமோ ?

ஸம்ஸாரதாபத்தால் பீதியடைந்த நாம் அழகிய சந்திரி
கை நிறைந்த கங்கை மணல் திட்டில் ஓரிடத்திலமர்ந்து
ஜன சப்தங்கள் அடங்கிய பின் ராத்திரியில் சிவ நாமத்தை
கோஷமிட்டு உச்சரித்துக்கொண்டு ஸம்ஸார துக்கத்தால்
கண்ணீர் நிறைந்து கலங்கி யிருக்கும் அவஸ்தையை
எப்போது நிவிர்த்தித்துக்கொள்ளுவோமோ தெரிய
வில்லையே!

அல்லது சிவ நாம உச்சாரணம் செய்து அதனல்
உண்டான ஆனந்த பாஷ்பம் ஏற்படும் தசையை
எப்போது அடைவோமோ என்றும் கருத்துக்கூறலாம்

वितीर्णे सर्वस्वे तरुणकरुणापूर्णहृदयाः
स्मरन्तः संसारे विगुणपरिणामां विधिगतिम् ।
वयं पुण्यारण्ये परिणतशरच्चन्द्रकिरणा-
स्त्रियामा नेष्यामो हरचरणचिन्तैकशरणाः ॥ ८६ ॥

விதீர்ணே ஸர்வஸ்வே தருணை
கருணா பூர்ண ஹ்ருதயா:
ஸ்மரந்த: ஸம்ஸாரே விகுண
பரிணாமாம் விதிகதிம் |
வயம் புண்யாரண்யே பரிணத
சரத் சந்த்ர கிரணா:
த்ரியாமா நேஷ்யாம: ஹர
சரண சிந்தைக சரணா: ||

வயம் - நாம், ஸம்ஸாரே - ஸம்ஸாரத்தில் விகுண பரிணாமாம் - கெடுதலான முடிவை உடைய, விதிகதிம் - தெய்வப்போக்கை, ஸ்மரந்த: - நினைத்து, ஸர்வஸ்வே - எல்லா ஸொத்துக்களையும், விதீர்ணே - யாசர்களுக்குக் கொடுத்தபின், தருணை - புதிதான, கருணாபூர்ண - தயையால் நிறைந்த - ஹ்ருதயா:- மனதுள்ளவர்களாக - புண்யாரண்யே - பரிசுத்தமானவனத்தில் - ஹரசரண சிவனுடைய திருவடிகளின் சிந்தைக சரணா:- த்யானத்தையே முக்ய ஸாதனமாகக்கொண்டு, பரிணத - விருத்தியடைந்த - சரத் சந்திர - சரத்கால சந்திரனுடைய - கிரணங்களை ஒளிகளையுடைய, த்ரியாமா - ராத்திரிகளை - நேஷ்யாம:- போக்குவோம்.

ஸம்ஸாரத்தின் போக்கு விபரீத முடிவுள்ளதாயிருப்பதை அறிந்து வைராக்கியம் பெற்று, தனங்களை தானம் செய்துவிட்டு, தயைநிறைந்த மனதுடன் காட்டில் தபஸ் செய்து ஈசன் திருவடி தியான மொன்றையே அடைக்கலமாகக்கொண்டு இரவுகளைக் கழிப்போம்.

कदा वाराणस्याममरतटिनीरोधसि वस-
न्वसानः कौपीनं शिरसि निदधानोऽञ्जलिपुटम् ।
अये गौरीनाथ त्रिपुरहर शंभो त्रिनयन
प्रसीदेति क्रोशन्निमिषमिव नेष्यामि दिवसान् ॥८७॥

கதாவாராணஸ்யாம் அமரதடிநீரோதஸி
வஸன் வஸாந: கௌபீனம் சிரஸி
நிததாநோஞ்ஜலிபுடம் !
அயே! கௌரீநாத! திரிபுரஹர!
சம்போ! த்ரிநயந! ப்ரஸீதேதி
க்ரோசன் நிமிஷமிவ
நேஷ்யாமி திவஸாந் || 87 ||

கதா - எப்போது, வாரணஸ்யாம் - காசியில், அமர தடிநீ ரோதஸி - தேவ கங்கையின் கரையில், வஸந் - வஸித்து, கௌபீநம் - கௌபீநத்தை மட்டும், வஸாந:-உடுத்திக் கொண்டு, சிரஸி - தலையில், அஞ்ஜலிபுடம் - அஞ்ஜலியை, நிததாந:- வைத்துக்கொண்டு, அயே! ஐயா, கௌரீநாத - பார்வதிபதியே, திரிபுரஹர! திருபுரனை ஸம்ஹரித்தவரே! சம்போ! சம்புவே, த்ரிநயந - முக்கண்ணுள்ளவனே! ப்ரஸீத - கருணை செய், இதி - என்று, க்ரோசன் - கோஷம் செய்து கொண்டு, ரஜநீம் -இரவை, நிமிஷமிவ - நிமிஷமாக, நேஷ்யாமி - போக்குவேனோ?

ஸம்ஸாரத்தில் வைராக்யமடைந்து கங்கா தீரத்தில் காசியில் வஸித்து கௌபீநம் மாத்திரம் தரித்து தலைமேல் கை கூப்பி சிவ நாமங்களை உரக்க உச்சரித்துக் கொண்டு இரவுகளை எப்போது போக்குவேனோ தெரியவில்லை.

स्नात्वा गाङ्गैः पयोभिः शुचिकुसुमफलैरर्चयित्वा विभो त्वां
ध्येये ध्यानं निवेश्य क्षितिधरकुहरग्रावपर्यङ्कमूले ।
आत्मारामः फलाशी गुरुवचनरतस्त्वत्प्रसादात्स्मरारे
दुःखं मोक्ष्ये कदाहं समकरचरणे पुंसि सेवासमुत्थम् ॥८८॥

ஸ்நாத்வா காங்கை: பயோபி:
சுசிகுஸுமபலை: அர்ச்சயித்வா
விபோ ! த்வாம் த்யேயே த்யானம் நிவேச்ய
க்ஷிதிதர குஹரக்ராவ பர்யங்கமூலே |
ஆத்மாராம: பலாஶீ குருவசநரத:
த்வத் ப்ரஸாத் ஸ்மராரே !
துக்கம் மோக்ஷ்யே கதாஹம்
ஸமகர சரணே பும்ஸி ஸேவா ஸமுத்தம் ||

அஹம் - நான், காங்கை: - கங்கையினுடைய, பயோபி:- ஜலங்களால், ஸ்நாத்வா - ஸ்நாநம் செய்துவிட்டு, சுசிகுஸும பலை:-பரிசுத்தமான புஷ்பங்களாலும் பழங்களாலும், விபோ! சிவனே! த்வாம் - உம்மை, அர்ச்சயித்வா - பூஜித்தும, த்யேயே - த்யானிக்கத்தக்க உம்மிடம், த்யானம் - நினைவை, நிவேச்ய - வைத்தும், க்ஷிதிதரகுஹர - மலையின் குகை யில், க்ராவ பர்யங்கமூலே - சிலையாகிற படுக்கையில் ஓரத் தில் வஸித்து, ஆத்மாராம:- ஆத்மார்த்த விஷயத்தில் பிர விர்த்தியுள்ளவனாக, பலாஶீ - பழங்களை சாப்பிட்டும், குரு வசனரத: - ஆசார்ய உபதேசத்தில் நின்று, ஏஸ்மராரே ! ஓ ! மன்மத சத்ருவான பகவானே! ஸமகர - மத்ஸ்ய சின் னத்துடன் கூடிய, சரணே - பாதத்தை உடைய, பும்ஸி - புருஷனிடம் (அரசனிடம்) ஸேவா ஸமுத்தம் - அடிமை செய்ததால் ஏற்பட்ட, துக்கம் - துக்கத்தை, த்வத்ப்ரஸா தாத் - உனது அருளால், கதா - எப்போது, விமோக்ஷ்யே- போக்கிக் கொள்வேனோ ?

மன்மத சத்ருவாகிய பகவானே! நான் கங்கா ஜலத்தால் ஸ்நானம்செய்து உம்மை புஷ்ப பலாதிகளால் பூஜித்து உம்மையே உள்ளும் தியானித்து மலையடிவாரத்திலுள்ள சிலாதலத்தில் ஆத்மாராமனாக வஸித்து ஆசார்யோபதேசங்களை நினைத்தும் அரசனிடம் அடிமைசெய்த துக்கத்தை உமது அருளால் எப்போது நீக்கிக்கொள்வேனோ?

एकाकी निःस्पृहः शान्तः पाणिपात्रो दिगम्बरः ।
कदा शंभो भविष्यामि कर्मनिर्मूलनक्षमः ॥ ८९ ॥

ஏகாகி நிஸ்ப்ருஹ: சாந்த:
பாணிபாத்ரோ திகம்பர: |
கதா சம்போ! பவிஷ்யாமி
கர்ம நிர்மூலநக்ஷம: || 89 ||

ஏகாகி - ஒருவனாயும், நிஸ்ருபஹ: - ஆசையற்றும் - சாந்த:- சாந்தனாக, பாணிபாத்ர:- ஹஸ்தத்தையே பிக்ஷா பாத்ரமாகக்கொண்டு, திகம்பர: - வஸ்திரமற்றும், ஏ சம்போ! கர்ம நிர்மூலநக்ஷம:- கர்மாவை நாசமாக்கும் சக்தியுள்ளவனாக, கதா - எப்பொது, பவிஷ்யாமி - ஆவேனோ?

ஆசையற்று சாந்தனாகி ஒருவனாகவேயிருந்து திகம்பரனாக அலைந்து கையில் பிக்ஷையெடுத்து வைராக்யசாலியாகி எப்போது அநாதி கர்மவாஸனையை நீக்கிக்கொள்வேனோ? சம்புவே நீர் சொல்லும்

पाणिं पात्रयतां निसर्गशुचिना भैक्षेण संतुष्यतां
यत्र क्वापि निषीदतां बहुतृणं विश्वं मुहुः पश्यताम् ।
अत्यागेऽपि तनोरखण्डपरमानन्दावबोधस्पृशा-
मध्वा कोऽपि शिवप्रसादसुलभः संपत्स्यते योगिनाम् ॥

ப்ாணிம் பாத்ரயதாம் நிஸர்க்க ருசிநா
பைக்ஷேண ஸந்துஷ்யதாம்
யத்ரக்வாபி நிஷீததாம் பஹு
த்ருணம் விஶ்வம் முஹு: பஶ்யதாம் ।
அத்யாகேऽபிதநோரகண்ட பரமானந்
தாவபோத ஸ்பருஶாம்
அத்வா கோऽபி ஶிவப்ரஸாத ஸுலப:
ஸம்பத்ஸ்யதே யோகிநாம் ॥

பாணிம் - கர தலத்தை, பாத்ரயதாம் - பிக்ஷா பாத்ர மாகக் கொண்டவர்களும், நிஸர்க்க ருசிநா - ஸ்வபாமாகவே ருசியுள்ள, பைக்ஷேண - பிக்ஷாந்நத்தால், ஸந்துஷ்யதாம் - திருப்தியடைந்தவர்களாயும், யத்ர க்வாபி - எங்கேயோ ஓரிடத்தில், நிஷீததாம் - உட்கார்ந்திருப்பவர்களும், விஶ்வம் - உலகத்தை, பஹு த்ருணம் - துரும்புக்கு ஸமமாக, முஹு: - அடிக்கடி, பஶ்யதாம் - பார்க்கிறவர்களாயும், தநோ: - சரீரத்தை, அத்யாகேऽபி - விடா திருக்கையிலும், அகண்ட பரமானந்தாவ போதஸ் ப்ருசாம் - நிறைந்த பரமானந்தபோதமுள்ளவர்களுமான, யோகிநாம் - யோகிகளுக்கு, சிவப்ரஸாத ஸுலப: - பரம சிவனுடைய அனுக்ரஹத்தால் கிடைக்கக்கூடிய, கோऽபி ஒரு, அத்வா - வழியானது, ஸம்பத்ஸ்யதே - ஏற்படக்கூடியது.

வைராக்யம் பெற்று, அதன் காரணமாக கரதலத்தையே பிக்ஷாபாத்ரமாகக் கொண்டு, பரிசுத்தமான பிக்ஷாந்நத்தால் ஸந்துஷ்டியடைந்து, உலகத்திய போகங்களைத் துரும்பாக நினைத்து, ஜீவன்முக்த தசையில் அகண்டானந்த பரிதர்களான யோகிகளுக்கு பரமசிவனுடைய அனுக்ரஹத்தால் ஸுலபமான உயர்ந்த சிரேயோ மார்க்கம் ஒன்று இருக்கிறது. அது தான் மோக்ஷ மார்க்கம்.

कौपीनं शतखण्डजर्जरतरं कन्था पुनस्तादृशी
नैश्चिन्त्यं निरपेक्षभैक्षमशनं निद्रा श्मशाने वने।
स्वातन्त्र्येण निरङ्कुशं विहरणं स्वान्तं प्रशान्तं सदा
स्थैर्यं योगमहोत्सवेऽपि च यदि त्रैलोक्यराज्येन किम्॥

கௌபீனம் ஶதகண்ட ஜர்ஜரதரம்
கந்தா புனஸ்தாத்ருஶீ
நைஶ்சிந்த்யம் நிரபேக்ஷபைக்ஷ
மஶனம் நித்ராஶ்மஶானே வனே ।
ஸ்வாதந்த்ரியேண நிரங்குசம் விஹரணம்
ஸ்வாந்தம் ப்ரஶாந்தம் ஸதா
ஸ்தைர்யம் யோக மஹோத்ஸவேऽபிச
யதி த்ரைலோக்ய ராஜ்யேந கிம் ॥

சதகண்ட ஜர்ஜாதரம் - நூறு துண்டுகளுடன் கல கலத்ததான, கௌபீனம் - கௌபீனமானது, யதி - இருந்தால், தாத்ருஶீ - அப்படிப்பட்ட, கந்தா - கந்தை வஸ்த்ரமானது, யதி - இருந்தால், நைச்சிந்த்யம் - சிந்தையற்ற நிலைமை, யதி - இருந்தாலும், நிரபேக்ஷபைக்ஷமஶனம் - அபேக்ஷியாமல் தானாகவே கிடைக்கிற பிக்ஷான்னமானது, யதி - இருந்தாலும், ஶ்மஶானே - ச்மசானத்திலோ, வனே - காட்டிலோ, நித்ரா - தூக்கம், யதி - இருந்தாலும், ஸ்வாதந்த்ரியேண - ஸ்வச்சந்தமாக, நிரங்குசம் - தடையின்றி, விஹரணம் - நடமாட்டமும், யதி - இருந்தாலும், ஸதா - எப்போதும், ப்ரசாந்தம் - சாந்திபெற்ற, ஸ்வாந்தம் - சித்தமானது, யதி - இருந்தாலும், யோக மஹோத்ஸவே - மஹோத்ஸவம் போன்றதான யோக ஸமாதியில், ஸ்தைர்யம் - உறுதியானது, யதி - இருந்தாலும், த்ரைலோக்ய ராஜ்யேந - மூன்றுலோக ராஜ்யத்தாலும், கிம் - என்ன பயன் ?

கவி இந்த ச்லோகத்தில் அவதூத சர்யா என்ற ஓர் அவஸ்தா விசேஷத்தை வர்ணிக்கிறார். பிர்ம்ஹாத்ம ஐக்யாநுஸந்தானமேற்பட்டு அந்த உறுதியால் வெளியிலுள்ள பிரபஞ்ச கார்யங்களை மறந்து யோக நிலையில் இருப்பது அவதூதசர்யை எனப்படுகிறது.

இந்த அவதூத நிலைமையில் இருக்கும் யோகிக்கு கந்தையான கௌபீன வஸ்த்ராதிகளோ, நிர்விசார நிலைமையும், நிரபேக்ஷமான பிக்ஷாந்நமும், வநத்தில் வாஸமும், ஸ்வதந்திரமான நடவடிக்கைகளும், சித்த சாந்தியும், உறுதியும் இருந்தாலே போதும். மூன்றுலோக ராஜ்ய ஸுகாநுபவம் இதற்கு ஈடாகாது.

ब्रह्माण्डं मण्डलीमात्रं किं लोभाय मनस्विनः ।
शफरीस्फुरितेनाब्धिः क्षुब्धो न खलु जायते ॥ ९२ ॥

பிர்ம்ஹாண்டம் மண்டலீ
மாத்ரம் கிம் லோபாய மனஸ்விந: ।
சபரீ ஸ்புரிதேந அப்தி:
க்ஷுப்தோ ந கலு ஜாயதே ॥

பிர்ம்ஹாண்டம் - இந்த பிர்மாண்டம் கூட, மனஸ்வின: - மன உறுதியுள்ள யோகிக்கு, மண்டலீ மாத்ரம் - ஒரு வர்த்துலமான ரேகைக்கு ஸமமே. அது, லோபாய - அவனுக்கு ஆசையை உண்டாக்க, கிம் ? - எவ்வளவு தூரம் ? சபரீ - மீனுடைய, ஸ்புரிதேந - துள்ளுதலால், அப்தி: - ஸமுத்ரமானது, க்ஷுப்த: - கலங்கினதாக, ந கலு ஜாயதே - ஆகாதன்றோ ?

மனது உறுதிகொண்ட யோகிக்கு ஸகல சராசரம் அடங்கிய இந்த பிர்மாண்டமே ஒரு மண்டலக் கோடுபோல் அலக்ஷ்யமானது. அது அவன் மனஸைக் கலங்கச்செய்யாது. ஒரு சிறிய மீன் துள்ளியதனால் ஸமுத்ரம் கலங்குமா ?

मातर्लक्ष्मि भजस्व कंचिदपरं मत्काङ्क्षिणी मा स्म भूः-
र्भोगेषु स्पृहयालवस्तव वशे का निःस्पृहाणामसि ॥
सद्यःस्यूतपलाशपत्रपुटिकापात्रे पवित्रीकृतै-
र्भिक्षावस्तुभिरेव संप्रति वयं वृत्तिं समीहामहे ॥ ९३ ॥

மாதர் லக்ஷ்மி! பஜஸ்வ கஞ்சித்
அபரம் மத்காங்க்ஷிணீ மாஸ்ம பூ:
போகேஷு ஸ்ப்ருஹயாலவ:
தவ வசே கா நிஸ்ப்ருஹாணுமஸி ।
ஸத்யஸ்யூத பலாஶ பத்ர புடிகா
பாத்ரே பவித்ரீ க்ருதை:
பிக்ஷாவஸ்துபிரேவ ஸம்ப்ரதி வயம்
வ்ருத்திம் ஸமீஹாமஹே ॥

மாத: ! - தாயான, லக்ஷ்மி ! - ஏ! லக்ஷ்மியே, அபரம் கஞ்சித் - வேறு ஒரு மனிதனை, பஜஸ்வ - அடைவாயாக. மத் காங்க்ஷிணீ - என்னை எதிர் பார்ப்பவளாக, மாஸ்மபூ: - இருக்காதே. போகேஷு - ஸம்ஸார போகங்களில், ஸ்ப்ருஹயாலவ: - ஆசைவைத்த மனிதர்கள், தவ வசே - உன் வசத்தில் இருக்கிறார்கள். நிஸ்ப்ருஹாணும் - ஆசையை விட்ட வைராக்யசாலிகளுக்கு, காஸி - நீ யார் போல். ஸத்யஸ்யூத - புதிதாக தைக்கப்பட்ட; பலாஶபத்ர - பலாச இலையிலானுலான, புடிகா - புட:மாகிற; பாத்ரே - பாத்ரத்தில், பவித்ரீ க்ருதை: - பரிசுத்தமாயுள்ள, பிக்ஷாவஸ்துபிரேவ - பிக்ஷா பதார்த்தங்களாலேயே, வயம் ஸம்ப்ரதி - இப்போது, வ்ருத்திம் - விருத்தியை, ஸமீஹாமஹே - விரும்புகிறோம்.

வைராக்யத்தால் அவதூத நிலைமையடைந்த யோகி லக்ஷ்மீ தேவியைப்பார்த்து கூறுகிருன். தாயே ! லக்ஷ்மீ இனிமேல் நீ என்னை எதிர்பாராதே. ஆசை நிறைந்த வேறு மனிதனைத் தேடு. உன் வசம் அவர்கள் பலர் இருக்கிருர்கள். ஆசையைத்துறந்த என் போன்றவர்களுக்கு நீ எம் மாத்திரம்? புதிதாக தைக்கப்பட்ட பலாச இலையாகிற புடத்தில் கிடைத்த பரிசுத்தமான பிக்ஷா வஸ்துக்களாலேயே நாம் இனி காலம் கழிக்க உறுதி கொண்டிருக்கிருேம்.

महाशय्या पृथ्वी विपुलमुपधानं भुजलता
वितानं चाकाशं व्यजनमनुकूलोऽयमनिलः ।
शरच्चन्द्रो दीपो विरतिवनितासङ्गमुदितः
सुखी शान्तः शेते मुनिरतनुभूतिर्नृप इव ॥ ९४ ॥

மஹாசய்யா ப்ருத்வீ விபுலமுபதானம் புஜலதா
விதானம் சாகாசம் வ்யஜன மநுகூலோ ்யமநில: ।
சரத்சந்த்ரோ தீப: விரதி வநிதா ஸங்க முதித:
ஸுகீ ஶாந்த: ஶேதே முநிரதநு பூதிர் ந்ருப இவ ॥

அதநு பூதி: - குறையற்ற ஐச்வர்யமுள்ள, முநி: - வைராக்ய நிஷ்டனை மனிதன், ந்ருப இவ - அரசன்போல், முதித: - ஸந்தோஷமுள்ளவனும், ஸுகீ - ஸுகமுள்ளவனும், ஶாந்த: - சாந்தியுள்ளவனும், ஶேதே - அமைதியாக தூங்குகிருன். அவனுக்கு ப்ருத்வீ - பூமி தலமே, மஹாசய்யா - உயர்ந்த படுக்கை. புஜலதா - கையே, விபுலம் - பெரிதான, உபதானம் - தலையணையாகும். ஆகாசம் - ஆகாசமே, விதானம் - மேல் விரிப்பு, அநுகூல: - அனுகூலமான, அயம் - இந்த, அநில: - காற்ருனது, வ்யஜனம் - விசிறியாகும். சரச்சந்த்ர: - சரத்கால சந்திரனே, தீப: - விளக்காகிருன். (இந்த முனியானவன்) விரதி வநிதா ஸங்க

முதித: - வைராக்யமாகிற ஸ்திரீயின் சேர்க்கையால் ஸந்துஷ்டனாயிருக்கிறான்.

வைராக்யசாலியான யோகியை அரசனுக்கு ஸமமாக வர்ணிக்கப்படுகிறது. யோகியானவன் அரசனைப்போல் ஸகலவித ஐச்வர்யஸுகமும் பெற்று விளங்குகிறான். இவனுக்கு பூமிதான் உயர்ந்த படுக்கை. தனது புஜமே தலையணை. படுக்கைக்குமேல் உள்ள விரிப்பு ஆகாசமே. இந்த அநுகூலமான காற்றே விசிறி போன்றது. சரச்சந்திரனே தீபமாயிருக்கிறான். இவ்வளவு ஸௌகர்யம் பெற்ற யோகி வைராக்யமாகிற ஸ்திரீயுடன் சேர்ந்து ஸுகித்து சாந்தனாக ஸமாதி நித்திரையிலிருக்கிறான்.

भिक्षाशी जनमध्यसङ्गरहितः स्वायत्तचेष्टः सदा
हानादानविरक्तमार्गनिरतः कश्चित्तपस्वी स्थितः ।
रथ्याकीर्णविशीर्णजीर्णवसनः संप्राप्तकन्थासनो
निर्मानो निरहंकृतिः शमसुखाभोगैकबद्धस्पृहः ॥९५॥

பிக்ஷாசீ ஜநமத்ய ஸங்க ரஹித:
ஸ்வாயத்த சேஷ்டஸ்ஸதா
ஹாநாதான விரக்த மார்க்க நிரத:
கச்சித் தபஸ்வீ ஸ்தித: ।
ரத்யாகீர்ண விசீர்ண ஜீர்ண
வஸந: ஸம்ப்ராப்த கந்தாஸந:
நிர்மானோ நிரஹங்க்ருதி: சமஸுக
போகைக பத்தஸ்ப்ருஹ: ॥

பிக்ஷாசீ - பிக்ஷான்னமாத்திரத்தை சாப்பிடுகிறவனும், ஜனங்களின் மத்தியில் வஸிக்க விருப்பமற்றவனும், ஸ்வாயத்த சேஷ்ட: - தன்னிஷ்டப்படி நடப்பவனும், ஸதா - எப்போதும், ஹாநாதான - க்ரஹிப்பது, த்யஜிப்பது இரண்டிலும் விரக்த - விலகியதான, மார்க்க நிரத: - வழி

யில் லக்கமுள்ளவனும், ரத்யாகீர்ண - வழியில் இறைந்து கிடக்கிற, விஶீர்ண - கலகலத்துப்போன, ஜீர்ணவஸந: - பழைய வஸ்திரத்தை தரித்தவனும், ஸம்ப்ராப்த கந்தாஸந: - கந்தையான ஆஸனமுள்ளவனும், நிர்மான: - கௌரவத்தைப்பாராதவனும், நிரஹங்க்ருதி: - அஹங்காரமற்றவனும், ஶமஸுகா போகைக - சாந்தியாகிற ஸுகத்தின் விஸ்தாரத்தாலேயே, பத்தஸ்ப்ருஹ: - ஆசை வைத்தவனுயுமிருக்கிற, கஶ்சித் + ஒருவன், தபஸ்வீ - தபோ நிஷ்டனுக, ஸ்தித: - இருப்பான்.

வைராக்யசாலியான ஒரு தபஸ்வியின் நிலையென்னவென்றல், அவன் பிக்ஷான்நமாத்திரம் சாப்பிட்டு ஜனக்கூட்டத்திலிருந்து விலகி, பராதீனமின்றி, த்யாஜ்ய-உபாதேயமற்ற நிவிருத்தி மார்க்க நிஷ்டனுகி கந்தையுடுத்தி, கௌரவ அஹங்காராதிகளை வர்ஜித்து, சாந்திஸுகமொன்றிலேயே மனம் வைத்தவனுயிருப்பான்.

चण्डालः किमयं द्विजातिरथवा शूद्रोऽथ किं तापसः
किं वा तत्त्वविवेकपेशलमतिर्योगीश्वरः कोऽपि किम् ।
इत्युत्पन्नविकल्पजल्पमुखरैराभाष्यमाणा जनै-
र्न क्रुद्धाः पथि नैव तुष्टमनसो यान्ति स्वयं योगिनः ॥

சண்டாள: கிமயம் த்விஜாதி
ரதவா ஶூத்ரோத கிம் தாபஸ:
கிம் வா தத்வவிவேக பேஶலமதி:
யோகீஶ்வர: கோऽபி கிம் ।
இத்யுத்பந்ந விகல்ப ஜல்ப முகரை:
ஆபாஷ்யமாணு: ஜனை:
ந க்ருத்தா: பதி நைவ துஷ்ட மநஸ:
யாந்தி ஸ்வயம் யோகிந: ॥

அயம் - இவன், சண்டாள: கிம் - சண்டாளனோ? அத -
அதவா - அல்லது, த்விஜாதி: - பிராம்மணனோ?
அல்லது, ஶூத்ர: - ஶூத்ரனோ? தாபஸ: கிம் - தபஸ்வியோ?
தத்வ நிவேஶ - தத்வத்தில் ஆழ்ந்த, பேஶலமதி: - மிருது
வான புத்தியுள்ள, கோऽபி - ஒரு, யோகீஶ்வரோவா? -
யோகிச்ரேஷ்டனோ? இத்யுத்பந்ந - இவ்வாறு உண்டாகிய,
விகல்ப ஜல்ப முகரை: - ஸந்தேக வார்த்தைகளைப் பேசுகிற,
ஜனை: - ஜனங்களால், ஆபாஷ்யமாணா: - பேசப்படுகிறவர்
களான, யோகிந: - யோகிகள், பதி - மார்க்கத்தில், ந
க்ருத்தா: - கோபமற்றவர்களாயும், ந துஷ்டா: - ஸந்தோஷ
மற்றவர்களாயும், யாந்தி - போய்க்கொண்டிருப்பார்கள்.

யோகிகள் மார்க்கங்களில் ஸஞ்சரிக்கும்போது ஜனங்
கள் அவர்களைப் பார்த்து, இவன் சண்டாளனோ, அல்லது
பிராம்மணனோ, அல்லது ஶூத்ரனோ, அல்லது தபஸ்வியோ,
வைராக்யசாலியான யோகியோ என்று பலவித ஸந்தேஹம்
கொண்டு பேசுவதைக் கேட்கும்போது கோபமோ, ஸந்
தோஷமோ அடையாமல் போய்க்கொண்டிருப்பார்கள்.

हिंसाशून्यमयत्नलभ्यमशनं धात्रा मरुत्कल्पितं
व्यालानां पशवस्तृणाङ्कुरभुजस्तुष्टाः स्थलीशायिनः।
संसारार्णवलङ्घनक्षमधियां वृत्तिः कृता सा नृणां
तामन्वेषयतां प्रयान्ति सततं सर्वे समाप्तिं गुणाः॥९७

ஹிம்ஸா ஶூன்யம யத்ந லப்ய
மஶநம் தாத்ரா மருத் கல்பிதம்
[illegible]ம் பசவஸ் த்ருணாங்கு
புஜ: துஷ்டா: ஸ்தலீ ஶாயிந: ।

ஸம்ஸாரார்ணவ லங்கநக்ஷமதியாம்
வ்ருத்தி: க்ருதா ஸா ந்ருணாம்
தாமந்வேஷயதாம் ப்ரயாந்தி
ஸததம்ஸர்வே ஸமாப்திம் குணா: ||

ஹிம்ஸா சூன்யம் - பிறருக்கு ஹிம்ஸையற்றதும், அயத்ந லப்யம் - ஸுலபமாகக் கிடைக்கக்கூடியதுமான, மருத் - காற்றானது, அசநம் - ஆஹாரமாக, தாத்ரா - பிர்ம்மாவினால், வ்யாளாநாம் - ஸர்ப்பங்களுக்கு, கல்பிதம் - ஏற்படுத்தப்பட்டுள்ளது. பசவ: - மிருகங்கள், த்ருணாங்குர புஜ: - புல் நுனியை தின்றுகிறவைகளாக, துஷ்டா: - ஸந்தோஷமடைந்து, ஸ்தலீ சாயின: - தரையில் படுத்து ஜீவிக்கின்றன. அதுபோல், ஸம்ஸார: - ஸம்ஸாரமாகிய, அர்ணவ - ஸமுத்ரத்தை, லங்கன - தாண்டுவதில், க்ஷமதியாம் - ஸாமர்த்தியமுள்ள மனதுடைய, ந்ருணாம் - மனிதர்களுக்கும், ஸாச - அப்படிப்பட்ட, வ்ருத்தி: - ஜீவனமானது, க்ருதா - செய்யப்பட்டிருக்கிறது. தாம் - எந்த (அந்த) வ்ருத்தியை, ஸததம் - எப்போதும், அந்வேஷயதாம் - தேடி அடைகிறவர்களுக்கு, ஸர்வே குணா: - எல்லா குணங்களும், ஸமாப்திம் - முடிவை, ப்ரயாந்தி - அடைகின்றனவோ.

ஈச்வரன் பாம்புக்குக்கூட, ஹிம்ஸையற்றதும் தானகக் கிடைக்கக்கூடியதுமான காற்றை ஆஹாரமாக கல்பித்துள்ளார். மிருகங்களும் புல்லைத்தின்று தரையில் படுத்து ஸந்தோஷிக்கின்றன. அதுபோல் ஸம்ஸார ஸமுத்திரத்தைத் தாண்ட சக்தியுள்ள மனம் படைத்த மனிதர்களுக்கும் அத்தகைய விருத்தியொன்றிருக்கிறது. அதுதான் வைராக்ய

மென்பது. அதை அவலம்பித்தவர்களுக்கு ஸத்வ ரஜஸ் தமஸ் முதலிய குணங்களும் மறைந்துவிடுகின்றன.

गङ्गातीरे हिमगिरिशिलाबद्धपद्मासनस्य
ब्रह्मध्यानाभ्यसनविधिना योगनिद्रां गतस्य ।
किं तैर्भाव्यं मम सुदिवसैर्यत्र ते निर्विशङ्काः
कण्डूयन्ते जरठहरिणाः स्वाङ्गमङ्गे मदीये ॥ ९८ ॥

கங்கா தீரே ஹிமகிரி சிலாபத்த பத்மாஸநஸ்ய
பிர்ம்மத்யானுப்யஸந விதினா யோகநித்ராம் கதஸ்ய ||
கிம் தைர்பாவ்யம் மம ஸுதிவஸை: யத்ர தே
நிர்விசங்கா: கண்டூயந்தே ஜரட ஹரிணா:
[ஸ்வாங்க மங்கே மதீயே ||

கங்கா தீரே - கங்கைக் கரையில், ஹிமகிரி சிலா - ஹிமாலய மலையின் கற்களில், பத்த பத்மாஸனஸ்ய - பத்மாஸனம் செய்து உட்கார்ந்து, பிர்ம்மத்யானுப்யஸன விதினா - பிர்ம்மத்யானுப்யாஸம் செய்யும் முறைப்படி, யோக நித்ராம் - யோக நிம்மதியை, கதஸ்ய - அடைந்த, மம - எனக்கு, தை: - அந்த, ஸுதிவஸை: - நல்ல தினங்கள், கிம் பாவ்யம் - கிடைக்கக்கூடுமா ? யத்ர - எந்த (அந்த) நல்ல தினங்களில், மதீயே - என்னுடைய, அங்கே - சரீரத்தில், ஜரட ஹரிணா: - கிழ மான்கள், நிர்விஸங்கா: - பயமற்று, ஸ்வாங்கம் - தங்கள் சரீரத்தை, கண்டூயந்தே - சொரிந்துகொள்ளுமோ ?

கங்கா தீரத்தில் ஹிமாலய சிலைகளில் பத்மாஸனம் போட்டுக்கொண்டு பிர்ம்மத்யான யோகஸமாதியை அடைந்துள்ள, என் சரீரத்தில் கிழ மான்கள், தங்கள் சரீரத்தை உறைந்து சொரிந்துகொள்ளும் காலம் வாலாதாதா ?

पाणिः पात्रं पवित्रं भ्रमणपरिगतं भैक्षमक्षय्यमन्नं
विस्तीर्णं वस्त्रमाशादशकमचपलं तल्पमस्वल्पमुर्वी ।
येषां निःसङ्गताङ्गीकरणपरिणतस्वान्तसंतोषिणस्ते
धन्याः संन्यस्तदैन्यव्यतिकरनिकराः कर्म निर्मूलयन्ति ॥

பாணி: பாத்ரம் பவித்ரம்
ப்ரமண பரிகதம் பைக்ஷமக்ஷய்யமந்நம்
விஸ்தீர்ணம் வஸ்த்ரமாஶா
தஶகமசபலம் தல்பமஸ்வல்பமுர்வீ ।
யேஷாம் நிஸ்ஸங்கதாங்கீகரணபரிணத
ஸ்வாந்த ஸந்தோஷிணஸ்தே
தந்யாஸ் ஸந்யஸ்த தைந்ய
வ்யதிகர நிகரா: கர்ம நிர்மூலயந்தி ॥

பாணி: - கையானது, பவித்ரம் - பரிசுத்தமான, பாத்ரம் - பிக்ஷாபாத்ரமாகும். ப்ரமண பரிகதம் - சுற்றியலைந்ததால் கிடைத்த, பைக்ஷமந்நம் - பிக்ஷாந்நமானது, அக்ஷய்யம் - குறைவற்றது. விஸ்தீர்ணம் - விசாலமானதும், ஆஶா தஶகம் - பத்து திசைகளும், வஸ்திரம் - வஸ்திரமாயும், அஸ்வல்பம் - விஸ்தாரமானதும், அசபலம் - அசைவற்றதுமான, உர்வீ - பூமியானது, தல்பம் - படுக்கையாயிருக்கவும், யேஷாம் - எந்த வைராக்யசாலிகளுக்கு இருக்கின்றனவோ, தே - அந்த யோகிகள், நிஸ்ஸங்கதாங்கீகரண - ஸம்ஸார ஸம்பந்தத்தைவிட்டு விலகிய நிலைமையை ஏற்றதால், பரிணத - பரிபக்வமடைந்த, ஸ்வாந்த - மனஸால், ஸந்தோஷிண: - ஸந்தோஷமடைந்தவர்களாகியும், ஸந்யஸ்த- தள்ளப்பட்ட, தைன்யவ்யதிகர நிகரா: - மனக்குழப்ப ஸம்பந்தத்தை உடையவர்களாயும், தன்யா: - இரு

தார்த்தர்களாகியும், கர்ம - (ஜன்மாந்தர) கர்மத்தை, நிர்மூலயந்தி - நசிக்கச்செய்கிறார்கள்.

எந்த வைராக்யசாலிகளான யோகிகளுக்கு, ஹஸ்தமே பிக்ஷாபாத்ரமாயும், பிக்ஷாந்நமே போஜனமாயும், திசைகளே வஸ்த்ரமாயும், பூமியே படுக்கையாயுமிருக்கிறதோ, அந்த யோகிகள் நிஸ்ஸங்க நிலைமையால் ஸந்தோஷத்துடன் தைன்யத்தை உதறித்தள்ளி ஜந்மாந்தர கர்மாவையும் நிர்மூலனம் செய்து கிருதார்த்தர்களாக விளங்குகிறார்கள்.

मातर्मेदिनि तात मारुत सखे तेजः सुबन्धो जल
भ्रातर्व्योम निबद्ध एव भवतामन्त्यः प्रणामाञ्जलिः ।
युष्मत्सङ्गवशोपजात सुकृतस्फार स्फुरन्निर्मलज्ञाना-
पास्त समस्तमोहमहिमा लीये परब्रह्मणि ॥ १०० ॥

மாதர் மேதினி ! தாத ! மாருத !
ஸகே ! தேஜஸ்ஸுபந்தோ ! ஜல !
ப்ராதர்வ்யோம ! நிபத்தஏவ
பவதாமந்த்ய: ப்ரணாமாஞ்ஜலி: ।
யுஷ்மத்ஸங்க வசோபஜாத
ஸுக்ருதஸ்பார ஸ்புரந்நிர்மல
ஜ்ஞாநாபாஸ்த ஸமஸ்தமோஹ
மஹிமா லீயே பரே ப்ரம்ஹணி ॥

மாத: - தாயான, மேதினீ ! - பூமியே, தாதமாருத - நண்பனான காற்றே ! மித்ரனான தேஜஸ்ஸே ! பந்துவான ஜலமே !, ப்ராதர்வ்யோம - ஸஹோதரனான ஆகாசமே, ஏஷ அஞ் பவதாம் - உங்களுக்கு, அந்த்ய: - கடைசியான, நிபத்த: - செய்யப்படுகிறது. ஜலி: - இந்த அஞ்ஜலியானது,

யுஷ்மத்ஸங்க - உங்கள் சேர்க்கையால், உபஜாத - உண்டான, ஸுக்ருதஸ்பார - புண்ய ஸமூஹத்தால், ஸ்புரத் - உண்டான, நிர்மலக்ஞான - நிர்மலமான க்ஞானத்தினால், அபாஸ்த - தள்ளப்பட்ட, ஸமஸ்தமோஹமஹிமா - எல்லாவித மோஹங்களின் மஹிமையை உடையவனாகி, பரேப்ரம்ஹணி - பரப்ரம்ஹ ஸ்வரூபத்தில், லீயே - லயித்துவிட்டேன்.

கடைசியாக கவி பூமி முதலிய பஞ்சபூதங்களை நமஸ்கரித்து பிரம்ஹ ஸாயுஜ்யத்தை சொல்லி இந்த சதகத்தை முடிக்கிறார்.

ஹே பூமியே, காற்றே, தேஜஸ்ஸே, ஜலமே, ஆகாசமே! இதோ உங்களுக்கு நான் கடைசியாகக்கைகூப்பி நமஸ்காரம் செய்கிறேன். உங்களுடைய ஸம்பந்தத்தால் (யோகத்தால்)பெற்ற ஸுக்ருதத்தினால் ஞானஒளியை அடைந்து ஸமஸ்தமோஹத்தையும் தள்ளி பரப்ரம்மத்தினிடம் லயிக்கிறேன்.

வைராக்யசதகம் ஸம்பூர்ணம்.

---



Printed At The Sri Janardana Printing Works, Ltd., T. H. S. Road, Kumbakonam.

யுஷ்மத்ஸங்க - உங்கள் சேர்க்கையால், உபஜாத - உண்டான, ஸுக்ருதஸ்பார - புண்ய ஸமூஹத்தால், ஸ்புரத் - உண்டான, நிர்மலக்ஞான - நிர்மலமான க்ஞானத்தினால், அபாஸ்த - தள்ளப்பட்ட, ஸமஸ்தமோஹமஹிமா - எல்லாவித மோஹங்களின் மஹிமையை உடையவனாகி, பரேப்ரம்ஹணி - பரப்ரம்ஹ ஸ்வரூபத்தில், லீயே - லயித்துவிட்டேன்.

கடைசியாக கவி பூமி முதலிய பஞ்சபூதங்களை நமஸ்கரித்து பிரம்ஹ ஸாயுஜ்யத்தை சொல்லி இந்த சதகத்தை முடிக்கிறார்.

ஹே பூமியே, காற்றே, தேஜஸ்ஸே, ஜலமே, ஆகாசமே! இதோ உங்களுக்கு நான் கடைசியாகக்கைகூப்பி நமஸ்காரம் செய்கிறேன். உங்களுடைய ஸம்பந்தத்தால் (யோகத்தால்)பெற்ற ஸுக்ருதத்தினால் ஞானஒளியை அடைந்து ஸமஸ்தமோஹத்தையும் தள்ளி பரப்ரம்மத்தினிடம் லயிக்கிறேன்.

வைராக்யசதகம் ஸம்பூர்ணம்.

---



Printed At The Sri Janardana Printing Works, Ltd., T. H. S. Road, Kumbakonam.

# வேதாந்தம் என்றால் என்ன?

(போலகம், சாஸ்த்ர ரத்னாகரம் ஸ்ரீ ராமசாஸ்திரிகள்)



ஸ்ரீ வேதவ்யாஸர்.

கடவுள் என்பது பரப்ரம்ஹம், அபரப்ரம்ஹம் என்று இருவிதமாய் ப்ரகாசிக்கும் ஒரே வஸ்து. பரப்ரம்ஹத்தை நிர்குண ப்ரம்ஹம் என்றும், அபரப்ரம்ஹத்தை ஸகுண ப்ரம்ஹம் என்றும் கூறுவர். ஸகுண ப்ரம்ஹம் உபாஸிக்கத்தக்க வஸ்து. நிர்குண ப்ரம்ஹம் அறிந்து அனுபவிக்க வேண்டிய வஸ்து. ஸகுண ப்ரம்ஹத்தை அறிந்தால், அவரை பக்தியுடன் உபாஸித்து இஹத்திலும், வைகுண்டம், கைலாஸம் முதலிய உட்பிரிவுகளையுடைய ப்ரும்ஹலோகமாகிய பரத்திலும் பலவித ஸுகங்களைப் பெறலாம். நிர்குண ப்ரும்ஹத்தை அறிந்தால் ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற ஸாதனங்களால் அதன் ஸாக்ஷாத்காரம் ஏற்பட ஜீவன்முக்தி, ப்ராரப்த முடிவில் விதேஹமுக்தி இவைகளைப் பெறலாம். இவ்விதம் புண்யம், பாபம், கடவுள் என்ற மூன்று வஸ்துக்களை அறிவிக்கும் வேதத்தினுடைய முடிவான பாகமே வேதாந்தம் எனப்படும். வேதத்தின் ஆதிபாகமே கர்ம காண்டம்

எனப்படும். அதில் விலக்கவேண்டிய பாபமும், அனுஷ்டிக்கவேண்டிய புண்யமும் கூறப்பட்டிருக்கிறது. புண்யத்தை ஒருவித பயனையும் கருதாமல், நான் செய்கிறேன் என்ற அஹங்காரமுமில்லாமல் அனுஷ்டித்து ஈச்வரார்ப்பணம் செய்வதே கர்மயோகமாகும். அதனல் பாபமாகிய அசுத்தி விலகி சித்தம் சுத்தமாகும். கர்மகாண்டத்தின் முக்ய நோக்கம் சித்தசுத்தி ஏற்படுவதே.

வேதத்தின் மத்ய பாகமே உபாஸனு காண்டம் எனப்படும். அதில் ஸகுண ப்ரம்ஹத்தின் ஸ்வரூபம் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸகுண ப்ரம்ஹத்தை அன்புடன் இடைவிடாமல் உபாஸிப்பதே பக்தியோகம். அதனல் சித்தத்திற்கு ஐகாக்ரயம், அதாவது ஒரே வஸ்துவில் சித்தம் நிலைத்திருப்பது என்ற பயன் ஏற்படும். ஈச்வர ப்ரஸாதத்தால் ஞானயோகமும் ஸுலபமாக ஸித்திக்கும். இந்த பயனே உபாஸனு காண்டத்தின் முக்ய நோக்கம். ஸகுண ப்ரும்ஹம் மாயா ஸம்பத்தத்தால் பக்தர்களின் ருசிக்கேற்க சிவன், சக்தி, விஷ்ணு, கணபதி, ஸ்கந்தர், ஸூர்யன் என்ற ஆறு உருவமடைந்துளது. கைலாஸம், வைகுண்டம் முதலிய லோகங்களில் இருப்பது. இந்த உலகம் ப்ரும்ஹலோகத்தின் உட்பிரிவுகள். ஸகுண ப்ரும்ஹத்தின் உபாஸனு பலத்தால் வைகுண்டம், கைலாஸம் முதலிய லோகங்களை அடைந்து அங்கு தான் உபாஸிக்கும் தைவத்துக்குத் துல்யமான திவ்ய ஸுகங்களை அனுபவித்துவிட்டுக் கடைசியில் ஈச்வரானுக்ரஹத்தால் ஞானம் ஏற்பட்டு மோக்ஷம்பெறலாம். இவ்விதம் க்ரமமாக மோக்ஷம் கிடைப்பதை க்ரமமுக்தி என்று வேதாந்திகள் கூறுவர். ப்ரம்மலோகம் செல்வதை அபர மோக்ஷமென்றே கூறுவர்.

வேதத்தின் முடிவாகிய பாகமே ஞான காண்டம். அதில் பரப்ரும்ஹத்தின் ஸ்வரூபம் விளக்கப்பட்டிருக்கிறது

சந்தர்மயம், தான் சந்தம் புசித்தொள்வதில்லை

பரப்ரும்ஹத்தை ஸாக்ஷாத்கரிப்பதே ஞான யோகம் எனப்படும். அதனுல் இந்த உலகத்திலேயே முக்தி பெறலாம். லோகாந்தரம் போகவேண்டாம். ப்ராரப்த முடிவில் விதேக முக்தி பெறலாம். வேதத்தில் மத்யம். அந்த்யம் இரண்டையும் சேர்த்தே வேதாந்தம் என்பர். உபாஸனம் கர்மாவைவிட ஞானத்திற்கு அ ந் த ர ங் க ஸாதனமாயிருப்பதால் உபாஸனம் ஜ்ஞானம் என்ற இரு பாகங்களும் வேதாந்தம் என்றே கூறப்படுவது பொருத் தமே. வேதத்தில் மூன்று காண்டங்களிருந்தாலும், அதில் இரண்டு காண்டங்களைச் சேர்த்து வேதாந்தம் என்ற ஒரே பெயரால் குறிப்பிட்டிருப்பதாலும், ஒரே ப்ரும் ஹமே ஸகுணம், நிர்குணம் என்ற இருவித ப்ரும்ஹமா யிருப்பதாலும் ப்ரும்ஹமீமாம்ஸை என்ற ஒரே க்ரந்தத் தால் வ்யாஸாசார்யர் இரண்டு காண்டங்களையும் விளக்கு கிருர். தர்மமீமாம்ஸை என்ற ஒரே க்ரந்தத்தால் கர்ம காண்டம் ஜைமினி முனிவரால் விளக்கப்பட்டிருக்கிறது. ஆக வேதத்தின் மூன்று காண்டங்களும், இந்த இரண்டு மீமாம்ஸா சாஸ்த்ரத்தால் விளக்கப்பட்டு விட்டபடியால் இரண்டு மீமாம்ஸைகளே உள்ளன. மூன்ருவது மீமாம்ஸை கிடையாது. ஜைமினி செய்த 'தேவதா காண்ட' மென்று கூறப்படும் 'ஸங்கர்ஷ காண்ட' மென் பது பூர்வமீமாம்ஸையின் சேஷமாகும். அதுவும் கர்ம பாகத்தையே விளக்குகிறது. உபாஸனுபாகத்தை விளக்க வில்லை. 'உபநிஷத்' எனப்படும் வேதாந்தத்திலும், அதன் விளக்கமான ப்ரும்மஸூத்ரத்திலும் 'உபாஸனம், ஞானம்' இரண்டும் கூறப்பட்டாலும் அதற்கு ஞானத்திலேயே பரம தாத்பர்யம். ஞானகாண்டமாகிய வேதாந்தம் போதிப்பது என்ன ?

ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवोब्रह्मैव नापरः ।
तज्ज्ञानाज्जीवतो मुक्तिरिति वेदान्तबोधितम् ॥

ப்ரும்மம் உண்மைப் பொருள். ஜகத்து மித்யை. பொய்யாகத் தோன்றும் பொருள் ஜீவன் – ப்ரும்மமே வேறல்ல. அந்த ஜீவ ப்ரும்ஹைக்யத்தை அறிந்தால் உயிருள்ள போதே முக்தியாகிய ஜீவன்முக்தி ஏற்படும். இதுவே வேதாந்தம் போதிக்கும் விஷயம். பிரும்ஹம் உண்மைப் பொருள் என்று த்வைதம், விசிஷ்டாத்வைதம் முதலிய பிற மதங்களிலும் கூறப்படுகிறது. அந்த மதங்களைக் காட்டிலும் அத்வைதமதமாகிய வேதாந்த மதத்திற்கு வேற்றுமை தோன்றுவதற்காகவே (ஜகத்) உலகம் பொய்யென்றும் தனியாகக் கூறுவது. ஜகத் பொய்யென்று பௌத்த மதமும் கூறுகிறது. ஆகவே அதைக் காட்டிலும் வேதாந்த மதத்திற்கு வேற்றுமையைக் காட்ட ப்ரும்ஹம் ஸத்யமென்றும் தனியாகக் கூறுவது. ஜீவன் ஜகத்தோடு சேர்ந்து பொய்யான பொருளன்று. அவன் உண்மையான ப்ரும்ஹ ஸ்வரூபமேயாகிறான். மாயை, அந்தக்கரணம் முதலிய உபாதி ஸம்பந்தத்தால் ஜீவன் ப்ரும்ஹத்தைக் காட்டிலும், வேறான பொருளாகத் தோன்றினாலும் ஜீவனை ப்ரும்மத்தைக் காட்டிலும் வேறாகப் பிரிக்கும் அந்த உபாதிகளும் ஜகத்தோடு சேர்ந்து பொய்யாய் விட்டபடியால், பொய்யான உபாதிகள் ஞானத்தால் விலகும் பொழுது ஜீவன் ப்ரும்ஹ ஸ்வரூபமாகவே யாகிறான். வேறாக இருப்பதில்லை.

ஜீவன், ஸத்-உள்ளவன்; சித்-அறிவுருபன் ; ஆனந்தம்-ஸுகஸ்வரூபீ என்ற ஸ்வரூபலக்ஷண முடையவனென்று அனுபவத்திலேயே தெரிகிறது.

ப்ரும்ஹமும் அப்படியே என்று வேதாந்தம் கூறுகிறது. ஆகையால் இரண்டும் ஒரே வஸ்து. இவ்விதம் ச்ருதி, யுக்தி, அனுபவங்களால் அறிந்தால் ஜீவித்திருக்கும் பொழுதே அஞ்ஞானம் விலகுவதாகிய முக்தியேற்படுகிறது. முக்திக்காக லோகாந்தரம் போக

வேண்டாம். இங்கிருந்தே ப்ரம்ஹாநந்தமாகிய முக்தி ஸுகத்தைப் பெறலாம். ப்ராரப்த முடிவில் விதேஹ முக்தியையும் அடையலாம். உபாதி பேதத்தால் வேருகத் தோன்றும் ஜீவன், ஈச்வரன் இவர்களின் உபாதி ஸம் பந்தத்தால் தோன்றும் பொய்யான ஸ்வரூபத்தையும் இரண்டுபேரையும் ஒன்ருக்கக்கூடிய அவர்களின் உபாதி ஸம்பந்த மற்ற உண்மை ஸ்வரூபத்தையும் வேதாந்தங் களிலுள்ள ஜீவேச்ரவர்களைப்பற்றிய அவாந்தர வாக்யங் கள் கூறுகின்றன. இரண்டு பேரும் ஒன்று என்று வேதாந்தங்களிலுள்ள மஹா வாக்யங்கள் கூறுகின்றன. அந்த மஹா வாக்யங்களே முக்யமானவை. அதனுலவை களுக்கே ''வேதாந்தமென்றும், உபநிஷத் என்றும், வேத மென்றும்'' பெயர் முக்யமானது. அதற்கு அனுகுணமாக இருப்பதாலேயே மற்ற வாக்யங்களுக்கும் அந்தப்பெயர் ஏற்பட்டது என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இவ்வித மான உண்மையே அத்வைததத்வம் என்று வழங்கப் படும். இந்த உண்மையான ஞானயோகத்தை விளக்கு வதாலேயே பகவத்பாதாளாகிய ஸ்ரீ சங்கராசார்யாளுக்கு அத்வைத ஸ்தாபனுசார்யாள் என்று பெயர்.

இந்த அத்வைத தத்வம் ஈச்வரானுக்ரஹத்தால் ஸ்பு ரிக்க வேண்டியிருப்பதாலும் அந்த ஈச்வரானுக்ரஹத்தை அடைவதற்காக ஈச்வரோபாஸநம் செய்ய வேண்டியிருப் பதாலும் அந்த ஈச்வரோபாஸநத்தை விளக்கும் சைவம், சாக்தம், வைஷ்ணவம், ஸௌரம், கர்ணபதம், ஸ்காந்தம் என்ற ஆறு வைதிக மதங்களையும் ஸ்தாபித்தபடியால் ஆசார்யாளை ஷண்மத ஸ்தாபனுசார்யாள் என்றும் கூறு கிருர்கள்.



ரூ. அ. ப.

8. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம். 0—4—0
மூலம் மட்டும், நாகரத்தில்

9. பர்த்ருஹரி ஸுபாஷிதத்திரிசதி
வைராக்ய சதகம்.
மூலம் நாகரத்திலும், தமிழிலும் விசேஷ அர்த்தங்களுடன் கூடியது. 1—0—0

10. ஷை நீதி சதகம். 1—0—0

11. ஸ்ரீ ஜகத்குருவின் உபதேசங்கள். 1—0—0
(மூன்றும் பாகம்)

12. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம்
நாகர லிபியில் நாமாவளியும், தமிழில் எளிய நடையில் பொழிப்புரையுடன் கூடியது. 1—0—0

13. திருக்குடந்தை மான்மியம்.
( கும்பகோணம் க்ஷேத்திர மஹிமை )
திருக்கைலாய பரம்பரை திருவாடுதுறை ஆதீன மகா வித்வான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்திரம் பிள்ளையவர்கள் செய்யுள் நடையில் இயற்றியதை, கும்பகோணம் நேட்டிவ் ஹைஸ்கூல் ரிடயர்ட் தமிழாசிரியர் ஸ்ரீ பி. ஸ்ரீனிவாசய்யர் அவர்களால் உரை நடையில் எழுதப் பட்டது. 3—0—0

—[ எல்லா புஸ்தகங்களுக்கும் தபால் சிலவு தனி ]—

ஸ்ரீ ஜனார்தன பிரிண்டிங் ஓர்க்ஸ் லிமிடெட்,
டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்.

